முழுதுமென்னுளத்தைவாட்டுமாலினியான்மொழிவதொன்றுண்டுகொலெ
ன்னுக், கழலிணைதொழலுமுலகினுக்கன்புகாட்டியநடித்தவெண்காட்டெ, மழ
லவிர்கரத்தோனன்பனீவேட்டவரும்பொருள்வரும்பதமிதுவே, மழவின்மா
ன்மியநாம்வகுக்கொணுதுனக்குவாய்த்ததென்றருளுபுமறைந்தான். (௨௬)

விழித்தெழுந் தனரச் சுதர்களப் பாளர் மிக்கெழு முவகையின் மிதந்தாங்
கொழித்திட லருமந் நியமநன் னெறிநின் றொழுகுநா ளுலகெலா முய்ய
வழுத்துசுத் தாத்து வைதசித் தாந்த வாய்மைமாண் சைவமீ வாழ
விழுத்தகு தூய பரம்பரை யருளான் மேதினிமீதினி விளங்க. (௨௭)

திருவருள் பெருக வனையதம் பதிகள் செய்தவத் தெய்வீகச் சிசுவா
யருளொளிப் பிழம்பா யவதரித் திடக்கண் டன்னையுந் தாதையு மளவா
பெருகுமா னந்த வாரிதோய்ந் தருமைப் பெருந்தவக் குருந்தினைப் பேணி
யானரு ணினைந்து நினைந்துள முருகி யார்வநீட் டினரெடுத் தணைத்தார். ()

இன்னவென் பருஞ்சீ ரருமைபா ராட்டு மிருஞ்செய லின்புறப்புரிவார்
தென்னில முயச்சார் திருவவ தாரச் சிறப்புயர் திருவிழா முதல
பன்னரும் பெருமைத் தினவிழா வனைய பதியினர் கிளைஞர்க ளேனோர்
தன்னிக ருவகை பெருகிய புரிந்து சாதகன்மாதிகள் சமைத்தார். (௨௯)

பல்லுக மொருவா தருந்தவம்பெரிதுபயிற்றினுங்கிடைப்பரும்பொருள்கைந்
நெல்லியங் கனியிற் கிடைத்ததென் றேகைநீர்முழு கிருமுது குரவ
ரல்லினு நீங்கா வருந்துணை யெனக்கொண் டவிர்மணிப் பணிநிரை யணைத்து
நல்லுறப் பணிந்தா ருயிரினும் போற்று நலனெனவர் நவிற்றுவா ரம்ம. (௩௦)

வைதிக சைவ தாபன குருவாய் வந்தருள் புரிந்தெதிர் மறையுஞ்
செய்துற நிலவி யழர்ந்தன முன்னுட் டெய்விக சுத்தவத் துவித
சைவசித் தாந்தத் தனிக்குரு மணியாய்ச் சார்ந்தரு ளேபுரி குதுமென்
றய்வருள் காழி வாழ்வுபின் னருமீண் டுதித்ததென் றுவப்புற முலகம்.. ()

வழுத்துமித் தூய சேயினைச் சுவேத வனப்பெரு மாளெனு நாமந்
தழைத்திட வழைத்தப் பதியினிற் சின்னுட் டங்கியச் சுவேதவ னேசுற
கிழைத்திடு விசேட பூசனை யாதி யியற்றியா ரருள்விடை பெறுபு
மழத்திரு மகவு மனையொடு தம்மூர் வந்தமர்ந் தனர்களப் பாளர். (௩௨)

ஆங்கமர் வுழிநன் மாதுலர் தமக்கின் னருண்மக வின்மையி னனைய
தேங்குதலையஞ்சொன் மகவையே தமக்குஞ்சேயெனப்பெறுநசையீர்ப்பத்
தாங்குசோ தரிமைத் துனரிடை வேண்டித் தம்பதிவெண்ணெய்நல்லூரிற்
பாங்குறப் பெற்று ரொடுந்தனிச் சேயைப் பரிந்தெடுத் தழைத்துடன் படர்
[ந்தார். (௩௩)

மாதுலர் தமது மனையலங் கார வகையெலாந் தகைபெற மலிவித்
தாதர முந்த னேர்புகுங் காலங் கமர்பெருங் கிளையெலா மடுத்தே
சாதிமங் கலங்கள் பெருகுற நீராஞ் சனம் வளைத் தெதிர்தழீஇத் தனதய
வோதகம்புகுந்தவ்வரும்பொருண் மணியையொண் மணிமஞ்சமீ துய்த்தார். ()

ஆங்குளார் தமக்கே யருமையிற் கிடைத்த வருந்தவச் சேய்மணி யாகப்
பாங்குபா ராட்டி யன்னைதா தையைநும் பாக்கியம் பாக்கிய மென்பா
ரோங்குறு முபய குலமணி விளக்கிவ் வொண்சிசு மணியென வுவப்பார்
தேங்குழிக் கிளைமுன் போற்றிய வனைய சேய்மணி தூய்மணி திகழும். (௩௫)

தூய்மணி யாங்கட் பாலலீ ரொதி யமர்ந்துசெ யருட்செய லாதி
யெம்மனோ ரெவர்க்கு மியம்பரி தாக வின்பமீ துறவளர்ந் திடுநாட்
செம்மழ லையஞ்சொ *லெனுந்தரா தமருந் திறந்தெரீஇத் தாதைமுற்கிளைஞ
ரிம்மக மணியு மூங்கையாங் கொல்லோ வென்றுளத் தெண்ணமிக்கிருந்தார்."

இவ்வகை யிரண்டாண் டெய்திவா ழிளஞ்சே யேனைய மகாரொர்ந்து மேகி"
யவ்வருள் பெருகும் வெண்ணெய்நல் லூரி னணிமறு கிடைவிளை யாடித்
திவ்விய மேனித் திருவொளி யெழுந்து திகழவீற் றிருந்திடுஞ் செவ்வி
யுய்வரு டருளிக் கயிலையின் றேகி யொண்மலை யாசல முனிபால். (௩௭)

அளவளா யினிய நண்புரை யாடி யமர்ந்துபி னிவண்வரக் கருதி
வளனுலாந் தெய்வ வெண்மணி விமான மருவிவிண் வழிச்சென் றொருவன்
பளகறு மவனின் னருள்பெறுசீடற் பணிந்தருள் பெறுபரஞ் சோதி
கிளர்தரு மவனிவ்விமானம்வீற் றிருந்து கெழுமுவா னெறிப்புகுங் காலை. ()

வெண்ணெய்நல் லூரினவ்விளஞ் சேய்தான் வீற்றிருந் தொளிமிறு கதனேர்
விண்ணிலம் மானஞ்செலவொழிந் துறவுண் மிளிர்பரஞ்சோதிமாமுனிவன்
றுண்ணென வியந்தெம் முளப்படியாண்டுந் துரிசற விரைசெலுந் தெய்வக்
கண்ணகன் விமானந் தகையுறீஇ நிற்குங் காரண மென்னெனக் காண்பான்.

திசைகளொன் பானுந் தடைசெயா நிலைமை தேர்ந்துபி னதோமுக
நசைதரு புவியை நோக்கித்தன் விமான நன்னிழ லுறுவுறப் பெற்றுந்
திசைதரு மிளஞ்சே யொன்மிருளிப் பிழம்பா யிலங்கல்கண் டினையசேய் வி
மான, மசைவறப் பிணித்த பெருவட நிழல்போ லவிர்வதே யல்லதொன்
[றில்லை. (௪0)

* எனும்-இடைக்குறை.

என்றுரைத் துணிந்தாங் கன்புமா ரருளு மின்புமற் புதமுகின் றியக்கச்
சென்னெருளிர் விமானத் தோடுமெம் மறுகிற் றிருாவெருண் டோடவு மசையா
தொன்னெருளி விரியத் தனியமர் சேய்பா லுற்றுநேர் நோககியவ் வொருசேய்
தன் றனிக் குருவாஞ் சத்திய ஞான தரிசனி யுருவெனத் தயங்கும். (சக)

பெருகுமற் புதநேர் கண்டினி தெடுத்தப் பிள்ளேயி னுள்ளிய மேனி
மருவிய துகட னருனையாற் றுடைத்து மடியில்வைத தனைத்துடன் மகிழ்ந்தே
யருளின்மூழ் குவித்தாங் கறன்முழு குவித்தின் பளிகரும்வெண் ணீறுமெய
யணிந்து,திருவருட்சத்தியோதிருவாணதீக்கையாநோககமுற்றளித்தே*(சஉ)

தீக்கைசெய யுழியா சிரியனச சீடற் சிவமக வாகரிருளு செயலுக
கேற்கநன் ஞம காணுஞ்செய முறையா லெப்பெய ரிடுதுமென் றெண்ணி
நோக்குதன் குரவன் சாயையே போலு நோனமையாற் றந்தைபோ மைந்தற்
காககுதன்மாபான்மெயகண்டானெனவேயனேயதன்குரவன்பேரமைத்தான.

புனிதவத்*துவித நிகழ்சிவ ஞான போதநூற் பொருண்முழு தமைய
வினிதுப தேசித் திதனைநீ மைநத விருநதமிழ் மொழிபெயர்த் திதற்கோர்
தனியுரை வாாத்தி கம்மெனும் பெயராற் சாறறுகென் றருளிமே லனைய
நனிஒயாளிர் சேயை யுடன்கொடு மேலு நசையெழ வாஙகணித் தேகி. (சச)

பிறைநிக ரொருகோட் டைநதுகைப் பொல்லாப் பிள்ளையார் திருவடிக் கமல
நறைமல ரனைய பிள்ளையோ டிறைஞ்சி நயத்துதி பலபுகன் றெதிர்நின்
றிறைவனே யடியா ரெண்ணியாங் கருளு மெநதையே யிநதுசே கரனே
மறைசிவா கமார்த்த சொரூபனே யிநத மைநதனின் னடைககலமைய.(சரு)

காமிக முதனு லேழ்சிவா கமநிக் கான்மூலா கருததமைந திலஙக
நீமிக வருள்கென் றத்தனிச சேயை நேருற விருததிமீண் டனைய
தோமிகன் முனிவ னீஙகின னநகத தோன்றலே யெனறிப முகத்தோ
னேமிக வாத சிவாகம முழுது மினிதரும பொருள்விரித் திசைக்கும்.(சசு)

இன்னண மாஙத ணிபமுகத் தொருவ னிருஙகுரு சிகாமணி யாகித்
தன்னமர் தளியி னன்னமெய் கண்ட தனையன முன் விருவிடையாதி
நனனருற் றிடப்போ தித்திடு காலந நாயகன் றளிப்புற நனினி
தனனினீர்கொளுமோாதையலககோயிறனிலெழுமொலிசெவிசசார. (சஎ)

அததளி நேர்நின் றுற்றுநோக கினளாங கனையசேய தன்னையே கண்டா
ளிததனிச சேயை மூஙகையென் றநதோ வினைவதென றநதைதாய முத
விததக மொழிபற் பலபுகன் றீண்டு விளஙகுமீ துணாநதிலர் போலு [லோர்
மிததகையவர்க்காஙகுணாத்துநாமென்றுஙகேகினள் *செயமையிற்கண்டாள்.

* சேய்ஙமயிற்கண்டாள்-வினையாலணையும பேர்.

ஏகியாங் கவர்மு னென்னைகொ னீர்நு மிளந்தனிச் சேய்மணி மூங்கை
யாகிய தெனத்துன் புறலொரு கோடி யருண்மொழி தருவதின் றறிந்தேன்
மீகெழு பொல்லாப் பிள்ளையார் கோயின் மேவிநீர் காண்மினென் றனளவ்
வோகைவா சகநதஞ் செவிப்புகு முன்ன ரோடிபு தாதையக் கோயில். (சகூ)

முன்னுறச் சேயததாய் வரும்பொழு தாங்கு மொழியெழு மொலியெதிர் கேட்டார்
பின்னராங் கொருவ ரிலாமையுங் கண்டார் பெருந்தகைச சிகாமணியும்
பன்னுசீர்ப்பொல்லா மணியுமே யுடனுய்ப் பரிந்துவீற் றிருத்தலுங் கண்டா
ரென்னெனவணித்தாயேகினர்முன்ன ரெழுமொழியிலாமைபின்கண்டார்.

ஆங்கவர் வரவு மாகமு முடிவு மமையமொத் தமைந்ததோ வயலார்
பாங்குறி னேதப் படாதெனு மரபைப் பாதுகாத் திடுமுளத் தானே
தீங்கற முழுதுந தெருள்கென வுளங்கொள் செய்தியான் முற்றிய திறனே
வீங்கும்ளடைவிற்றனித்துணர்த்துதுமென்றெண்ணியோயாதெனவுண
[ரேம். (ருக)

வேறு.

பொல்லா மணியுஞ் சேய்மணியும் புகலு மொழியொன் றின்றியமர்
வில்லார் தோற்றங் கண்டுவகை மேன்மேற் பெருக வீழ்ந்திறைஞ்சி
நல்லார் பரவு மிபமுகத்தெந் நாதா வேதா கமப்பொருளே
யெல்லாமுணர்த்துமெந்தாயெம்மிளஞ்சேய்மவுனமிரித்தனையோ. (ருஉ)

மாமன் மலப்பாம் புருவொழித்த வரத சரத வள்ளாலோ
சேம நிதியே நின்றிருமுன் றிருவாய் முதலிற் றிறப்பதெனுந்
தேமன் விரத நெறிநின்றுன் றிருமுன் றிருவாய மலர்சேயை
யூம னேயென் றுளங்கொண்டோ முண்மை யுணரு முரனில்லோம். (ருங)

என்று துதித்தா ரருட்சேயை யெடுத்தா ரணைத்தா ரின்புற்றார்
நன்று பியன்மேற் கொண்டுவந்தார் நணுகுங் கிளைஞர் நற்பதியோர்
துன்று மோகைப் பேரோதை துதையச் சூழத் தம்மனையிற்
சென்று மணியா தனத்தனைய சேய்வீற் றிருப்ப நேர்பணிந்தார். (ருச)

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்தா ளிளஞ்சேய் சான்றோ னெனுமகிமை
தோன்ற நேர்கண் டின்புற்று நீக்கி யெடுத்தா ளேக்கமைத்தா
ளூன்று மன்பான் மார்பணைத்தா ளுசசி மோந்தாண் முததமிட்டா
ளான்ற தாய்செ யருஞ்செயல்க ளறைத லெளிதோ வம்மம்ம. (ருரு)

நாளு நாளு மப்பதியோர் நவிற்றற் கருமிவ் வற்புதங்கேட்
டாளுங்குலதெய வதமிதுவென் றடிக்கு மேனைப் பல்பதியோர்
கேளிர் முதலோர் வந்துவந்து கிடைத்துக காண்டன் மாத்திரையே
மூளு மிடர்நீத் திட்டமெலா முன்னி யாங்குப் பெற்றுவப்பார். (ருசு)

மதிவே ணியனே பொருளென்னும் வாய்மை யுணர்ந்து மனந்துணிந்த
வதிதீ விரசத் தினிபாதத் தமைதி வாய்த்த வுத்தமர்கண்
முதிர்பூ மனவா சகங்கடந்தார் முதலோ ரடுத்துச் சூழ்ந்திறைஞ்சத்
திதியா ரருணோக் களித்துரிய தீக்கை திகழ்பக் குவநோக்கி. (௫௭)

அருள்செய் குரவன் மொழிப்படியே யருமைத் தமிழின் மொழிபெயர்த்த
பொருள்செய் புனித சிவஞான போதந் தனைவார்த் திகமுடனே
தெருள்செய் தருளி யவ்வடியார் செறிந்து சூழ நாப்பணமர்ந்
திருள்செய் மலநீத் தத்துவித வின்பே தருமச் சேய்மணிதான். (௫௮)

இவ்வா றனைய மெய்கண்ட வின்ப மணிநா டொறும்பொல்லாக்
கைவா ரணமா முகத்தெந்தை கழல்போற் றமைது முதனியம
முய்வா ரடிப்பப் புரிந்தமர்ந்தாங் குறவீற் றிருக்குஞ் செயல்கேட்டார்.
சைவாதிபர்தங் குலகுரவர் சகலா கமபண் டிதாபாங்கர். (௫௯)

ஆக மாதி யருணூல்க ளமைய வோது மன்பர்சிலர்
சோக மாறி யமைந்துமனந் தூய்மை யுறுமா சிவஞான
தாக மாகி யதுபுணர்த்துந் தன்மை யவர்பா லின்மைதெரீஇ
யூக மாக வெண்ணெய்நல்லூ ருற்றார் காணப் பெற்றாரால். (௬௦)

முன்ன ரமர்சத் திநிபாத முதியர் பெறும்பே றுற்றாங்கு
நன்ன ரருளம் மெய்கண்ட நாதன் கழறாழ்ந் துடன்சூழ்ந்தார்
பின்ன ரனைய திருத்துறையூர்ப் பெரிய ரவர்சார் புணர்ந்துடனே
யினனர் தமையீண் டழைத்துறுகென் றேயி னார்மா ணவர்சிலரை. (௬௧)

அவரு மனைய ராயினர்பின் னருஞ்சிற் சிலரை யனுப்பினரச்
சிவமா மறையோ ரன்றவருஞ் சென்றாங் கவ்வா றுடனமர்ந்தா
ரிவர்மா ணாக்க ரெல்லாரு மிவ்வா றடுத்து வெண்ணெய்நல்லூர்த்
தவர்போற் றியன்மெய் கண்டமணி சரணே சரணாச் சார்ந்தமைந்தார். (௬௨)

தம்மா ணாக்க ரெல்லாருந் தமைவிட் டேகத் தனித்தமரு
மம்மா தவரீ தென்கொலமை யடுத்து நமந்த களப்பாள
னம்மா ரருளாற் பெறுசிறுவ னவிற்றுங் குதலை யினாசிரம்பா
னெம்மாண் பினனென் றடுத்தமர்ந்தா ரெம்பான் முழுதோர் மாணவகர். ()

நன்று நன்று கலிப்பெருமை நவிற்றற் கரிய தேயென்பா
ரொன்று முணர்ச்சி நுண்ணியர்சென் றுற்ற தாகித் திடற்பாற்றே
சென்று காண்டு மென்பார்நஞ் சீடன் சிறுவ னெதிர்புகுந்து
நின்று காண்ட னம்பெருமை நிலைமைக் கடுக்கு மோவென்பார். (௬௪)

இவ்வா றனைய சிவமறையோ ரெல்லை கடந்து முறுகிவளர்ந்
தவ்வா ணவவல் லபஞ்சாயு மமயு மணித்தா தலுக்கிசைய
வொவ்வா வுரைகள் பலபுகன்றுங் குறலே துணிந்தா ரொருதலையா
யெவ்வா யுறினுந் தாமுனஞ்செ லெழுச்சி யணிக ளுறச்சென்றார். (சுரு)

சிவிகை சிதைந்த புத்தகங்கள் செறியுஞ் சகட மச்சொடிந்த
கவிகை முதல முரிந்தபெருங் காற்றாற் சகுனம் பலதடுத்த
குவிகை யினரும் விட்டகன்றார் கூறு மிவற்று மாணவநோ
யவிகை தெளியப் பாதுகையோ டடுத்தா ரதுவுங் குமிழ்தெறித்த. (சுசு)

கருவி கழன்று சிவத்தோடு கலவுஞ் சுத்தாத் துவிதநிலை
மருவும் பெருமை தமக்கணித்தின் வாய்த்த லுணர்த்தரங் குடன்சூழும்
பொருள்க ளொழியத் தனித்தேகும் புனிதர் வெண்ணெய்ப் பதிமேவித்
தருநல் லருளே யுருவாமத் தனிமா குரவ சிகாமணிவாழ். (சுஎ)

திருமா ளிகைநே ரணித்தாகச் சென்றா ரனைய மெய்கண்டா
னருளா னனநேர் புவிநோக்க வமர்ந்து நாப்பண் வீற்றிருப்ப
வொருவாப் பெரியர் திருமுறையேந் தொண்கை யினர்பற் பலர்சூழ்ந்து
பொருளா ரமுதுண் டதன்வசமாய்ப் போற்றுங் கொலுநே ருறக்கண்டார்.

யாமுட் புகினேர் கண்டிறைஞ்சா னிருக்கை யெழானே யிருக்கைதரான்
றேமற் றிடுநம் வாய்மையினுற் றேன்று மிவனேர் நிற்றலடா
தாமற் புதங்காண் பதும்வேண்டு மதற்கீண் டிதுவே யுபாயமெனத்
தாமப் புறத்தோர் செயல்பிறிதாற் சரிப்பார் போலங் குலவினரால். (சுகூ)

அப்போ தனைய மெய்கண்டா னமைந்து சூழு மப்பெரியர்க்
கொப்போ தருமா ணவச்சிமிழ்ப்பி னுண்மை யுணர்த்து திறங்கேட்டா
ரிப்பேர் மலத்தி னியலென்னை யென்றுங் குப்பி வினவினரச்
சொற்போ யுறலு மெய்கண்ட தூய மணியாங் கோர்சிறிது. (எ0)

பொழுது தாழ்த்து நிமிர்ந்திதுவே போலு மெனநேர் பார்த்திடலுந்
தொழுது வீழ்ந்தார் சென்னிமலர்த் துணைத்தா ளுரிஞ்சக் கிடந்தாங்கே
யழுது பொருமி யெந்தாயோ வறியாச் சிறியே னுற்றபிழை
முழுதும் பொறுத்தா ளென்றுபல மொழியாற் றுதித்து நேர்பணிந்தார்.(

நேயம் வறந்து திரிசுருங்கு நிலைமைச் சுடர்மிக் கெழுந்தொளிர்ந்தே
மாயு முடனுங் கதுபோல வளரா ணவமே லெழவினவி
யோய நிரீக்க ணங்கண்டாங் குடனு ரடிவீழ்ந் தெழாமலமர்
தூய சீட சிகாமணியைத் தூக்கி யெடுத்தொண் டீக்கைமுறை (எஉ)

திகழ மலர்ப்பூந் திருவடிகள் சென்னி சூட்டிச் சிவம்புணர்த்திப்
புகல வருஞ்சீர்ச் சிவஞான போதந் தெருட்டி முன்புகுந்தாங்
ககல வருமா றெண்மருக்கு முதன்மை யளித்தவ் வேலெழுவர்
நிகர்மா ணவகர் சூழ்ந்திறைஞ்ச நிலவு மனைய விளங்குழவி. (எ௩)

திருவார் துறையூ ரருணந்தி சிவனக் குரவ சிகாமணிபாற்
பொருவா வினவுஞ் சிவஞான போதத் தாழ்நுண் பொருளெல்லாந்
தெருள்வாய்ந் திலங்குஞ் சிவஞான சித்தி யாவொன் றுத்தமர்போற்
றொருமாண் வழிநூல் வழியடியா ருடன்கொண் டியவான்விரித்துரைத்தார்.

இந்நூ லுடனூர் நன்னூலொன் றிருபா விருபஃ தெனுமபுனித
மெய்ந்நூ றனதா குருமணிபான் மேவுந்துதியாச் சிவஞான
முன்னூற் போதந்திருவிழியா முறைசெய் தமைத்தக் குருமணிதா
ளன்னூல் சமர்ப்பித் தாங்கொருவா தமர்ந்தார் துறையூ ரருமறையோர். ()

சாற்று மிவர்பான் மறைஞான சம்பந் தருமாங் கவர்பாங்கர்ப்
போற்றும் பெரிய ருமாபதியும் புணர்ந்து தீக்கை யுபதேசப்
பேற்றின் வாழ்ந்தா ரிந்நால்வர் பெயர்சந் தான குரவரென்ப
தேற்று மனைய வுமாபதிபாற் றிகழ்சந் ததிகள் பற்பலவாம். (எசு)

குலவு மினைய சந்தான குரவர் நால்வர் பெரும்புவியி
னுலக மெவையும் வந்திறைஞ்சி யுய்ந்து வாழ்கென் றிருவருளா
னிலவு கோயில் கொண்டமர்ந்துன் னியவீற் றிருக்கின் றாரென்று
மலரு மினைய மெய்கண்ட மணிவந் துதிப்ப மாதவஞ்செய. (எஎ)

பெருமை யுடைமை யான்முனநாம் பேணி யுரைத்தா மேலினியத
திருவெண் காட்டிற் கணியையினிற் றிகழ்சீ புரமென் றொன்றதுச்சர்
வருதண் கடவூ ரெனும்பெயரால் வயங்கு மனைய திருப்பதியின்
மிருகண் டருள்சேய மார்க்கண்ட விமல முனிவந் தடுத்தாங்கே. (எஅ)

தன்றே காவ சானநிலே தணத்தி நீடா யுகந்தருவான்
மன்று டமலற் பூசித்து மன்று தெஞ டொறும் புரிந்து
நின்று னவனுக் கிறையளித்த நெறியா யகமுற் றியதுணர்ந்து
குன்று விறலின் மறலியவட் குறுகி முறுகி வளாரளியான் (எக)

ஓவா துஞற்று சிவார்ச்சனையி னொருமித் தயர்மார்க கண்டரெதிர்
வாவா வென்னும் விளிமாற்றம் வழங்க வனையான் விளிமாற்ற
மேவாய்ப் புறச்செ யர்ச்சனைநின் றெதிர்நோக் கிலன்மேற் பிதிர்நோக்கத்
தாவாக் கினிசென் றுடல்வெதுப்பத் தன்கைப் பாசம் பிணித்தீர்த்தான். ()

வேறு.

ஈர்த்த பாசமுன் னிடைவெளி நீத்திமா சலகோன்
றீர்த்த மேனியிற் சிவாக்கியம் போன்மெனச் சேர்த்த
நார்த்த சிந்தையர்க் கெவரெனும் புரியிடர் நணுகா
கூர்த்த வின்பமே யாமெனக் கூறுநூ றுணிந்தாம். (அக)

குழக னெண்கட லூரிறை பேரருட் குறியைத்
தழுவி யேத்தினன் றனையனுங் கனையனைத் தளரேல்
பழுது தொண்டருக காற்றினர் கெவரென் பான்மை
வழுவில் கூற்றை யிக் கூற்றினிற் காட்டுது மைந்த. (அஉ)

என்று வாய்மலர்ந் திறலினம் மறலிவீழ்ந் தினைவா
னொன்று தைத்தன னும்பர்கோ னம்பிரான் றன்மே
லொன்று வெஞ்சின மடங்கலான் மடங்கறன் னுடல
கன்று வித்தவக் கருமையோர்ந் தருமைமார்க் கண்டன். (அங)

ஐய விப்பழு தெப்பொழு தகலுமென் றடிதாழ்ந்
துய்ய மெய்ப்பழு தொருங்கொழித் தடுத்தவர்க் குதவி
செய்ய முந்துறு சிந்துறழ் கருணையோய் திறம்பா
மெய்ய செய்யபொன் மேனிய வானியல் விமல. (அச)

எனத்து தித்தலு மன்பகே ளிப்புவி யிடையே
மனத்து தித்தபல் வரனெலா மளிக்குமா வனமொன்
றினத்து தித்தபன் முனிவர்சூ ழிடனதா மனைய
வனத்து தித்தவண் பச்சிம வாவியொன் றுளதால். (அரு)

ஏனை நீருடற் புறத்தழுக் கிரித்திடு மெல்லை
தானும் வேண்டுமோ முழுதுறி னக்கணந் தனிலுன்
மேனி நின்மைபோ மேலெழின் மேலொளி மேவு
மான வாயமையா லத்தட நீரினீ யாடி. (அசா)

ஆங்க ருட்சுயம் புமுதலிங் கேசனை யன்பு
தேங்க நேர்தொழு தமர்குதி திறலிவெம் மறலுன்
பாங்க ரெப்பொழு தினுமினி யுறுதசிர் படைத்தே
யோங்கி வாழ்கிரஞ் சீவியா யுறுதியீ துறுதி. (அஎ)

அனைய தீர்த்தநின் னுமமே யகிலமும் போற்றப்
புனையு மென்றருக கரந்தவா சகமிசைப் பொலிய
வினித வாய்மைதன் செவிபுகுந் துளங்குளிர்ந் தீர்ப்ப
வினைத பும்முனி பணிந்தருள்விடைபெறீஇ மீண்டான். (அஅ)

சூத கானனத் தெய்தினன் றண்ணெனு மேல்பார்
சீத வாவிதோய்ந் தெழுமுன மலினமெய் தீர்ந்து
பூத மேனிமிக் கொளியெழப் போந்தமு தேச
பாத வம்புய முடியுறப் பன்முறை பணிந்தான். (அகூ)

எழுந்து நின்றமு துருவநோக் கிருகணீ ரருவி
பொழிந்து பாய்தரப் புரையிலான் புரைந்துள முருகி
வழிந்து சென்றருட் டுணையடிக் கமலமென் மலரி
லழுந்து மன்பினுற் றிருமுனின் றருநுதி புகலும். (கூ0)

சோம ருத்திர வகிலமா நதிபதே சுருதி
நாம வுக்கிர வக்கிரே சுரபர நாத
பீம சாருவ வினபதே பிரணவ ரூப
பூம ஞம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூக)

பாசு பாணிய பசுபதே யிரணிய பாகு
வாசு பத்தகா மியபரி பூரண வரத
தாசு கற்பக விரத்தமா லோகபாக தவபொற்
புரசு காம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூஉ)

வனச நேத்திர குசுமமா பூசித மாற்குத்
தனக ராம்புய சககர தாயக சடில
கனக சம்மியா கநதர கநதர காள
புனித வாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூங)

அடிய ரெண்ணிய வெண்ணியாங் கருளமு தேச
வடிகொள் சூலசார் மிருகண்டு வம்மிச பால
முடிகொள் வானதி மதிபொதி முக்கண திருவெண்
பொடிகொ ளாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூச)

உலக முற்றுமின் பளித்தினி தோம்பரு ளுரிமை
நலன்மு ஞம்பல வரும்பொரு ணிறைசிவ நாமந
தலைகொ ளாற்றல்வே றெவர்க்குமின் றொருதனக் கேயாய்ப்
பொலியு மாம்பிர வனேசநின் பொன்னடி போற்றி. (கூரு)

என்றிவ் வாதிபஃ றுதிபுகன் றடிக்கடி யிறைஞ்சு
நன்றி கூர்மிரு கண்டுசே யானன நளினத்
தொன்றி முக்கணும் பானுவாய் மலர்த்திட வுவகை
துன்றி மந்திரேச் சுரனெதிர் தோன்றியீ தருளும். (கூகூ)

கேட்டி யாலெமக் கினியமெய் யன்பநீ கினைத்தும்
பாட்டி ருநதுதி யாலெமக் கின்பமே பலித்த
வேட்ட தென்கொலோ பகருதி யென்றனன் விமலன்
றேட்ட மிககவன் பின்னரும பணிநதிது செப்பும். (கஎ)

பெரிய நாயகி மணாளநின் பிறங்கிரண் டெழுத்தா
மரிய வண்சிவ நாமமா மனுததுய ரனைததது
மிரிய நீககிமெயச சிவததுவப் பேறரு ளியற்கை
தெரிய வாயநிக மாகமத துணிபுரா சிரியர். (கஅ)

எநதை நின்பத மனறியீண டெப்பொரு ளெனினுஞ்
சிநதை வேட்டிலேந திண்ணமே யேழையேஞ சிறியேம்
பநதி யான்மறை யபுததியாற் பேதமெம புததி
வநதி யாதப சாரமேற் புரியினும வளளால். (கக)

திருநது முற்றுணா வுறறிலாச சிற்றறி வுடையார்
புரிநத செயவினை நோககலென ஞமெனப பொறுமை
பரிநது செயதெமை மருதருள புரிகெனப் பரவி
யருநத வததிரு முனிபுகன் றிறைஞசலு மமலன. (கoo)

வேறு.

வருதியா லரிய தோன்றல் வநதிவண் முநது நீதோய
சரசுநின் பெயரி ஞலெசக சகமும்போற் றியநின் றேுஙக
மருவிமூழ் குறப்பெற்றோர்கடு வல்வினை யனைத்து நீங்கி
யரியன புத்தி முத்தி யஙகையா மலக மாக. (கoக)

என்றினி தருளி மேலு மின்னுநீ வேண்டிற் றென்னை
நன்றுரை யெனவெம பெமமா னமநதுமாாக கண்டன கூறுந
துன்றியா ருயிாக ளெல்லாந தோயநதுயவா னீண்டென முன்னீ
நின்றருள் வரமென் றென்று நிலையுதல வேண்டு மண்ணல (கoஉ)

அடியவ முளதெத ழுநதுன னடியமுந தன்பெஞ் ஞான்று
மொடிவிலா திறுதி யாவிக குறததகு மிடருற் றுலு
நெடிதுற வளர வேண்டு நிமலநீ யருளு கெனனுப்
படியுறப் பணிநது பின்னும் பரவினன் பரனி யமபும். (கoங)

மைநதநிற் கெனவொன் றேுதா மாண்பினை பரோப கார
சிந்தையை யாகி வேண்டு திறத்தினி துவகை கூர்நதா
முந்தற மெவற்றி னுள்ளு முக்கிய மிதுவே யின்ன
துய்தொளிர் சீவன் முத்த ரிலக்கண முணர்ச்சி மிக்கோய். (கoச)

எவ்வகை யுயிர்க ளேனு மிறையுமோ ரிடருந் தம்மா
லவ்வுயிர்க் குறுமை யோம்பி யளிப்பது சீவுன் மூத்தர்
தெய்வீக வியலென் றேதுந் திருநது நூ லிதனின் மேலா
முய்வரு ளறன்வே றின்மை யுண்மையே வண்மை மைந்த. (க0ரு)

சாற்றுமிப் பரோப கார தருமமே பெரிய தென்னப்
போற்றிதி காச மொன்று புகலுதுங் கேட்டி மைந்த
பேற்றினி லுயர்ந்த தேவப் பிரியனோர் விப்பி ரேசன்
றேற்றுமவ் வேதி யற்கு திருமறு மருமத் தோற்கும். (க0சு)

முன்னிகழ் சம்வா தத்தின் முதுமறை யவனவ் விண்டு
தன்னெதி ருலகில் யாவன் சாற்றுகைம் மாறு நோக்கா
துன்னிய பரோப கார முஞற்றுவ னவன்பா லீச
னின்னரு ளுவகை கூரு மென்றனன் வினவு மாலோன். (க0எ)

நன்றுநன் றுலகில் யாவர் நயந்துதம் பொருட்ட லாம
லொன்றிய முயற்சி யேனோர்க் குஞற்றுந ருதுதா னிற்க
வென்றிவெள் விடை யோ னற்றல் விழைந்ததி றுவ தென்னை
தன்றனக் கலாமு யற்சி தரினவ ரறிவி லாரே. (க0அ)

தேவர்கண் முனிவ ரேனோர் செய்யருந் தவம னேக
மாவன யாவுந் தத்த மனுபவக் கலதொன் றுண்டோ
நீவிழைந் துரைத்த தொல்லா நிலையதென் றுரைப்ப மாலத்
தாவரு மறையோன் கூறுஞ் சாற்றிய தற்பு தத்தே. (க0கூ)

அகிலநா யகனின் முன்னோ ரஞ்சியோ டோட வாட்டுந்
தகுவிட மயின்ற மாண்புந் தன்பொருட் டென்மை போலும்
மிகவிழைந் துறுநீ கீர வீரைபல் லிடருற் றேய்ந்து
மிகவுறு தமுத மத்திட் டீநதது மற்றே போலும். (கக0)

மலையமா தவனெம் பெம்மான் மணப்பெருந் திருவோ லகக்கம்
புலனுறத் தெரிசித் தேத்தும் புனிதவாழ் வையும் விடுத்துத்
தலையற னிதுவே யென்னச் சமநிலை புடவிக் கீந்த
நிலைமுதற் புரிய னேக நிகழ்ச்சியு மற்றே போலும். (ககக)

சாற்றுப மன்னி யப்போர்த் தகவனும் பகவன் சார்ந்து
போற்றிய கண்ணற் கின்பப் பூங்கழன் முடியிற் சூட்டித்
தேற்றுபு சைவ தீக்கை திருத்திமெ யருத்தி வாய்மை
யாற்றினிற் புகுத்த தாதி யனைத்துமாங் கற்றே போலும். (ககஉ)

திருமுறை கண்ட சோழர் திறன்மனு நீதி கண்ட
வரசருட் சிபிவேந் தாதி யருட்பெருஞ் செல்வர் செய்த
பரிவெலா மற்றே போலும் பகர்ந்தது நன்று நன்று
சுரர்முனி வரர்மு னின்னோர் தூச்செய லுணர்ந்தி லாய்கொல். (ககங)

என்னுளந் தெரிய வோதிற் றென்றிது துணிந்தேன் பூவின்
மின்னுறை மருமத் தண்ணன் மேதகு பரோப காரந்
தன்னின்மேற் றரும மில்லை சாற்றிய துண்மை யாகு
மன்னது சுவார்த்த முற்று மளிக்குமே லிசைப்ப தென்னும். (ககச)

என்றரிக் கிணைய விப்பி ரேசனோர்த் தெதிர்ம றுத்தா
னன்றருண் மைந்த விங்ங னவிற்றிய பரோப கார
வென்றிமா தரும மேன்மை விளம்புவ தினியெ னென்னு
வன்றரு ளமுத நாத னருட்குறி யதிற்க ரந்தான் (ககரு)

திருவமு தேசன் முன்செய் திருவரு ளுன்னி யுன்னி
யுருகிய வுளத்த னுயவ் வுறுவர்கோன் மிருகண் டும்ப
லொருவிலான் சூத கானத் துறைந்தருண் மந்தி ரேசன்
மருமல ரடிமுப் போதும் வழுத்திவீற் றிருந்தான் மன்னோ. (ககசு)

வீற்றிருந் தமர்மிரு கண்டருள்சேய் மேலெழு மன்புள முந்தவெழுந்
தாற்றினி லமுதிறை மேற்றிசையோ ரருட்குறி யத்தளி யுண்ணிறுவிப்
போற்றியர்ச் சனைதினம் புரிதருமுட் புரிவொடு மச்சிவ லிங்கத்தைச்
சாற்றுப மார்க்கண்ட லிங்கமெனச் சாற்றரி ததன்பெருந் தகைமையென.()

செங்கையி னொளிர்தரு பொன்புரிவேத் திரப்படை யன்னிவை யியம்புதலு
மங்கவை வினவிய சனற்குமர னடிகளு மடிதொழு மடியனெனைச்
சங்கையி னொழிவுற வருளுகெனத் தாழ்ந்திது புகலுவன் பெரியன்னை
பங்கனை யாம்பிர வனேசனெனப் பகர்ந்தனை யெந்தைம னிதுகாறும்.(ககஅ)

மந்திர நாயக னெனும்பெயரு மத்தியின் மத்தியின் வழங்கினையான்
முந்தபி தானத்தின் பரியாய மோவிது வேறெனி லிடுகுறியோ
சிந்தைசெய் காரணப் பெயரேயோ திகழ்நிப மேலதை விரித்தெரியேன்
புந்தியி னயிர்ப்பற வருளுகெனப் போற்றினன் முதைதன் புதல்வனரோ ()

ரப் படைக்கரன்முன் விளம்புவன் கேண்மதி சனற்குமர
மனுவிறை யெனும்பெய ரதிகுய்ய மாண்பொரு ணிறைதரு நிபநாம
மெனவுண ருதியிது தெளிதருவா ணியம்புது மோரிதி காசமெனு
முனமவ னருளிய வாகேண்மின் முனிவர்க ளெனமொழி தருஞ்சூதன். ()

வேறு

இத்தகு மாகதை சொற்றவர் கேள்விய ரிச்சையர் சாதக ரெவரேனு
மெத்திறு னீண்டி யுத்தம சேய்பல மிக்குய ராயுக மூதலாய
நத்திக வாழ்முழு துற்றமர் வார்சிவ நற்குரு வாரருள் பெறுவார்பின்
மித்தைய வாவொழி புய்த்துணர் வாரொரு மெய்ப்பர வீடெளி துறுவா
[ரால். (கஉக)

மார்க்கண்டேயச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ருகஅஎ.

---

# இராமன் மந்திரோபதேசம் பெற்ற சருக்கம்.

—:o:—

சூர்த்த காலே வென்ற சூனு துலங்கு காதை யோதினுஞ்
சீர்த்த ராமன் மந்தி ராதி திறங்கொள் வாய்மை யோதுவா
மார்த்த பாத வன்பு கூர வமர்ந்து கேண்மி யாவெனு
நார்த்த பாத நந்தி நாத னயந்து கூறு மாலரோ. (க)

வேறு

சனற்கு மார கேண்மியா தனக்கு மாரன் மைந்தனு
மெனக்கொண் மாய னுமுன மிழைத்த தீமை யீனரு
மனக்கொ ளார்த பாதக மீதித்து மாத வப்பிரு
குனக்கி தாகு மென்றெமை யுலப்பி லாத யோனியில். (உ)

சென்று சென்று லேகெனச்செப்பு சாப முற்றுடைத்
தன்று நின்று வேண்டநீ யையி ரண்டு தோற்றமா
கென்ற வாணை லங்கன மெம்மி னுவ தன்றினி
நன்றி னுள்ளுந் தீமையு நவையி னுள்ளு நன்மையும். (ங)

ஆவ செய்கை வகையினென் பதுபி ரத்தி யக்கமே
யாவு நம்மி னோர்ந்தனம் யாது தான வக்குலம்
வீவ தாற்று நன்மையுள் விளைந்த சாப மேற்கொடப்
பாவ நாமுணச் செலுற் பவத்து ணன்மை வாய்ப்பதால். (ச)

நிருத ராதி துட்டர நீதி நீக்கி நீதியிற்
பொருவி லாத சிட்டரைப் புரக்கு நன்மை வாய்க்குமா
பிருகு சாப மீதருள் பிறந்தை நோக்கி யான்றவர்
திருகு கோப முங்கலஞ் செய்யு மென்ப தேர்ந்தனம். (௫)

என்றி வாதி யொவ்வொன்று யாவு மோர்ந்து ளந்துணிந்
தன்ற யோத்தி வாழ்தச ரதப்பெ யர்க்கொ ளாற்றல்சால்
வென்றி நாம வேந்தர்கோன் விழுத்த வப்பெ ரும்பய
னென்றி நின்று வம்மெனு வுற்றெ திர்ந்த ழைத்திட. (௬)

ஆத வன்கு லங்கண்மூற் றுற்ற ரும்பெ ருந்தவங்
கோதொ ழிந்த கோசல நாட்டி ருங்கொ ழுந்தவம்
பூத லஞ்செய் மாதவம் பொலிந்தொ ருங்க ழைத்திடக்
காதல் கொண்ட விந்திரை காத லன்னெ ழுந்தனன். (௭)

உரைத்த வேந்தர் கோளரி யுச்சி மேற்கொ ளும்பலாய்த்
தரைத்த லத்து தித்தனன் றனய னுக்கொ டாதைதன்
வரைத்த டம்பு யத்தினன் மகிசு மக்கும் வென்றிநாம்
விரித்த லென்ன வன்பெயர் விளக்கு மாற்றல் முற்றுமே. (௮)

அரசி ருக்கு மந்நக ரளவி லெத்து ணைத்திற
லரச ருக்கு மேனைய ரனைவ ருக்கும் போர்குறித்
வரமு தற்க ணெல்லையும் மருவொ ணுத சீர்த்திதன்
வரமி குத்த பேரினல் வயக்கு மேலு ரைப்பதென். (௯)

தன்னி கர்த்த தந்நகர் தன்னின் மாலு தித்தபின்
றன்னின் மிக்க தென்னமுச் சகங்க ளுந்து தித்திடு
மென்னி லன்ன சேயினெண் ணிலாத கீர்த்தி யாதுமொன்
றென்னி லாவ தேகொல்வே றியாவ ரானு மாவகொல். (௧௦)

அண்ட மியாவுந் தேசமும் மகர மியாவு முற்றும்வாழ்
தொண்டர் யாரு மாதவர் சுத்த யோகர் சித்தருந்
தண்ட ளிர்க்கை யாருமைந் தரும்ப மித்தி டுங்களிப்
பெண்ட ரச்செய் நீர்மையா லிராம நாம மெய்தினன். (௧௧)

வேறு

தாம நாமமி ராம நாமமுன் சார மாவைகுந் தப்பிரான்
காம னேவருட் கந்த னேயெனக் கவினு டேகலை வளரவே
மாம னுமென வுணர்வு றுவண மனுட னுமென வளர்ந்துபின்
பூமன் யாமக னும்வ சிட்டனைப் போற்றி யாதர வேற்றியே. (௧௨)

போத நூல்பல கேட்டல் சிந்தனை புந்தி தேறுத னிட்டையே
யாதி யாவையு நிரம்ப வாய்ந்துகா மாதி யானவை யொருங்குநீத்
தேத மில்பொறை கருணை சத்திய மின்சொ லாதிய யாவுமேய்ந்
தோடுதொ ணுதசீர்ச் சீத வாசமா மூறையி னுள்ளுல கெலாமுற. (௧௩)

அனுசர் மூவரோ டகன மர்ந்தரு ளன்னை தாதைசொ லவைமுடித்
தினிது மேவுழி முனிவ னுங்குவந் திளவ லோடழைத் திடப்புகுந்
துனல ருந்திறற் றூட காவத முனுற்றி மேன்மிது லாபுரிப்
பொனைம ணந்துவந் தன்னை தாதையைப் போற்றி வீற்றிருந் தானரோ. (௧௪)

வீற்றி ருக்குநாள் வேறொர் நாணனி விரும்பு தாதைசொல் கரும்புதேன்
போற்றி தித்துடல் பூரித் தொண்செவிப் புகுது முன்னெழீஇப் போம்பிரி
வாற்றொ ணுதுரு கிளவல் சானகி யடிதொ டர்ந்திடக் கடிதுசென்
றேற்ற கானகி வாச மேமகக் கென்று முள்ளதென் றேகினான். (௧௫)

கருத்த மாமழை யிலங்க வந்தருள் காளை யேகிய கானனை
மிருத்த நம்மதி தெய்வ மானிட மேனி கொண்டிவண் மேவமுன்
னொருத்த மாதவ மென்கொ லென்றளி துலங்கு நாண்மலர் முகங்கணீ
ருகுத்து நீடலை வணங்கி யொண்பதத் தொழிவு றுமலர் பொழிவன. (௧௬)

மானி னம்பல பின்பு சானகி வாஞ்சை தீர்கெனு மாறெழு
மானி னம்பல வுங்கோ பாலனென் றறிந்த போனனி யார்த்தெழுந்
தேனி னம்பல விறைபி தாவெனத் தெரிந்த போலிசை செய்தெழும்
வானி னம்பல மேனி கண்டின மாமெ னத்தொடர் வானெழும். (௧௭)

வேழ நங்குலங் காக்க தெய்வத மேய தென்றெதிர் வீழ்ந்தெழுங்
கேழ னம்முரு மேற்கொ ணுதனைக் கிட்டி றேமெனக் கிளர்ந்தெழும்
பாழி மாவரி நாப சீயவுற் பவமி தோமெனப் பதந்தொழும்
வாழ்கு டாவடி சாம்ப வன்பினர் வணங்கல் போற்பத மலர்தொழும். (௧௮)

குணங்க ணீள்குறு முனிமு னேரெகு குலாதி பன்புகுந் தின்னினி
யணங்கு முற்றொழித் தின்ப வீடரு ளைந்தெ ழுத்துப தேசநன்
மணங்கொளுஞ்செயல் வாய்க்கு மாண்பினை மனங்கொ ளற்கொர்நி மித்தமா
யிணங்கு தாரக சகித வைந்தெழுத் திதழி யாமலர் காட்டுமே. (௧௯)

நெடிய நீகுறு முனியைத் தாழ்ந்திடர் நீக்கு கென்றுட னேவல்போ
னெடிய பூருக நிரையி ராகவ னீள்க பூற்கணி லைறஞ்சுமால்
கடிய மௌவல்சே வடிப ணிந்துன காதன் மாமன்கை வாளியாய்க்
கடியை யென்றுல கோது றும்பழி கடத்து கென்றலிற் கலவுமால். (௨௦)

இன்ன கானனத் தேகி ராகவ னிளவல் சானகி பின்வர
முன்ன ரேபல வளங்கள் கண்டுமென் மொழியு வப்புறக் காட்டுபு
மன்னு தண்டக வனம்பு குந்தவண் வாழு மாதவர் சூழல்வா
யின்ன மந்தவ ராசி பெற்றினி தேகி மாமல யேசன்வாழ். (உக)

உடச முன்வின விப்பு குந்தவ ணுண்ம லர்ப்பதந் தாழ்ந்தெழுந்
தடிக ளும்மடி யடிய னேன்றொழுற் கடியின் மாதவ மென்னெனுத்
தடம லர்க்கைகு வித்து நின்றதா சரதி யானன நோக்குபு
நெடியபானுகு லேச மாசறு நின்வ ரத்துநல் வரத்தெனு. (உஉ)

முகமன் பற்பல கூறி யாசிகண் மொழிந்தி ருத்துபு மூளரிவாழ்
தகவி தெம்மனோர்க் கேய டுத்தத சரத சக்கர வர்த்திமா
மகனி னக்கிவண் வரவ டுத்ததெம் மாதர் மாதவங் கோதிலா
துகம்வ ழுத்தநின் றியலு மாறிட ரொழித்த ளிப்பதை யுன்னியோ. (உ௩)

வேறு.

மைந்த நின்னிள வடிவு நோக்கலை மல்கு பல்லுரு வகையு நோக்கலை
தந்தை தாயர்போற் றுதலை நோக்கலை சார்வ பௌமனீ தமியை போலவே
யிந்த மாவனம் வந்த காரணம் யாதி யம்பென வெழுந்தி ராமனு
மந்த ணாளரொ லார்க்கு மோரர சருந்த வத்தினோ ரரசு நீயரோ. (உ௪)

அகில லோகமு மடிப ணிந்திடி னவர வர்க்குளகுறைகண் மூற்றொழித்
திகல லங்களும் பரல லங்களு மிணையின் மோக்கவா யிலும ளித்திடத்
தகுமொர் பேரர சாய நீயொரு தமிய னேனையு மரசனென்பதோ
நகையி தாகுமெம் மரச லக்கண நவின்ற துண்மையே ரசமி லாதவன். (உரு)

என்னு மர்த்தமேல் யான்கொ ளத்தகு மெந்தைநின்னரு செந்தநாளினு
மன்னு நித்திய சுகவி யாபக வரத மாசிவ ஞான வானர
சென்னிலேழையேனிசைப்பதெங்ஙனமென்றமைந்துதன்னகர்நின்றேகிய
தின்ன தென்றுமுற் றிசைத்துமேலுமோரேழைவிண்ணப்பநின்றிருச்செவி.

சாத்தி யகளுக தாணு வேதிகர் சதுர மூற்றுணர் சாந்த வேந்த வென்
றேத்தி நின்றெதி ரோது மையவிங் கெத்து ணைத்தவந் தான மாதியி
னீத்தி டற்கரும் பவஞ்ச வாஞ்சையா நிறைக டற்கடந் திடுமு பாய மொன்
றூர்த்தி தீர்தர வருடி யாலென வடிப ணிந்தன னலரி மைந்தனே. (உஎ)

அதுவி னுய்மல யாச லத்தலைமை யாள கத்திய மாமு னீந்திரன்
கதிர்கு லாதிப வுத்த மக்குண கணங்கள் சேர்கரு ணால கேண்மதி
யதிர்க டற்புவி யாளு பாயமுன் னுய காமுறு மாச ருள்ளக
மெதிரி லாமறை சிவாக மந்துணிந் தியம்பு மந்தண மினிது கேட்டனை. ()

முதுவ சிட்டனிற்குணர்த்துபோதகன்முதுக்குறைந்தெழுசனகன்மாதுலன்
மிதமில் கேள்வியொண் கதிரின் மைந்தனீ விதைத்ததொன்றுபின் விளை
வொன்றுருகுமோ, வதிவி ருப்பநின் கேள்வி யின்னமக் கைய துய்யவான்
மெய்ய செய்யவள், பதியு னக்கிது பகரும் பாக்கியம் பலித்த தின்றெமக்
கென்று பன்னுமால். (உகூ)

சாதி யாச்சிர மாதி யொன்றினுந் தவறி லுத்தம ஞான சீலராற்
காதல் கூர்சமு சார சாகரங் கடந்த ருட்களை யிவர்ந்து வாழ்வுறற்
கேத மின்னிக மாக மந்துணிந் தீச னேயெவ ரினுந்தி யேயனென்
றோது மாபதி யொருவ னேயுள முருகு பூசனைக் குரிய நாயகன். (௩0)

அகில முந்தன துடைமை யாகவைத் தாளு மீசனுக் கனைய பூசனைத்
தகுப ணிக்கண லர்தி யாதினுஞ் சாரு மார்வமொன் றில்லை யாதலா
னெகுமு ளத்தொடு மகம்பு றத்தினு நிகம வாகம முறைவ ழாமலப்
பகவ பூசனை யாற்று வானெவன் பவஞ்ச வாரிதி பாற்று வானவன். (௩க)

அனைய பூசனைக் கின்றி யேயமை யாத முக்கிய மாகு மங்கமொன்
றனைய தென்றிடி லரிய மந்தண மினிய தோதுதுங் கேளி ராகவ
வினையை வெல்வது பவஞ்ச நீர்த்தட மேலெடுப்பது வேத வொண்சிரந்
தனைய டுத்தமெய்ப் பரசி வத்தின தனிச்சொ ரூபநிச் சயார்த்த பூரிதம். ()

பரம வாசக மாயொ ளிர்வது பஞ்ச பாதக நாசஞ் செய்வது
வரம காசிவ ஞான சாதன மந்தி ரேசமாய் வயங்கு நீரது
திரம சாத்தியந் தேவர் மாதவர் தேர்ந்து ளோர்க்குமே செப்பு தற்கது
வுரமன் மத்திய மறையின் மத்திய வுருத்தி ரத்தொளி விரித்த ரத்தினம்.()

ஆய ரத்தினந் தூய மெய்த்திரு வைந்தெ ழுத்தென வறிய வோதுமான்
மேய வன்னமா மந்தி ரேசநின் மிளிர்செ விக்கணே குளிர வுய்க்குதும்
வாய விம்மநு நீகொண் முன்னரே மற்ற தற்கொரு முக்கி யாங்கமுந்
தோய வேண்டுமென் னதும னுச்சக தூய வெண்டிரு நீறு தாரணம். (௩ச)

பூதி தாரண மின்றி யிம்மனுப் புகலி னிட்பல மென்னு மாமறை
யாத லால்விர சாங்கி யின்விளை வாய சித்திதா யகவெண் ணீற்றினை
யோது நூன்முறை பரவப் பூசிமேலொளித ருந்திரி புண்ட ரங்களு
மேதி லாதணி கென்று கூறியாங் கிசைத்த வாவிர சாங்கி நீற்றினை. (௩௫)

முறைவி ளைத்தெடுத் தள்ளி யீதலு முளரி கூம்பிநேர் மலர வாங்குபு
நிறையுத் தூளன புண்ட ரங்கணு னெறிய ணிந்தெதிர் முறைப ணிந்தனன்
கறையி லாமனத் திறையி ராகவன் கலச யோனியக் காகுத் தன்றனைக்
குறைதெ றுஞ்சிவ தீக்கை யாற்றுபு குறித்த மந்திர வமுது குத்தனன். ()

தூய தனமெசவ் வாயு குத்தவச் சுவைய மந்திரா ரமுத மாந்தினன்
வாய பேரின்ப வாரி யிற்றனை மிறந்த மாக்தொரு வாறெ ழுந்துட
னேய வாரியன் பாத தாமரை நேர்ப ணிந்தடிக் கடியெ ழுந்துநின்
றேய்வி லாக்கரு ணைம்பு தேயென் றுடலு மாவியு முடலு முன்னதே. (௩எ)

செய்கை மாறிலாச் சிறிய னுயினேன் செய்கை மாறுநின் றிருவ ருட்பெருஞ்
செய்கை கொள்கிலாச் சீரி தென்பது தேற்ற மாகநேர் தெரிய வந்ததென்
றுய்கை பெற்றசீ ராம னேதவவ் வுடச னுதனுங் குடச மாதவ
னுய்கை செய்சிவ நாம மாயிரத் துண்மை யாவையு முணர நல்கினன். (௩அ)

ஆச றச்சிவ தத்து வார்த்தங்க ளனைத்து முள்ளகத் தமையத் தேற்றிமே
லீச னேயொரு வன்றி யேயன்மற் றேனை யோர்களெவ் வெவருஞ் சீவரே
மாச றத்தியா தாக்க ளென்றுமா மறைசொல் சூத்திர வாக்கி யந்தனைத்
தேசு றத்தனி யோது மாசிவ கீதை நூலையுந் தெரிய நல்கினன். (௩௯)

இன்ன வாறகத் தியமு னீந்திர னிராம னுக்குநீ றளித்த மேன்மையாற்
றுன்னு றும்பசுத் துவத்தை மாற்றிமேற் றுலங்கு தாரக சகித வைந்தெழுத்
தென்னு மந்திர செபத்தி னற்சிவத் துவவி ளக்கமே லேற வேற்றியப்
பன்னு மந்திரஞ் செபித்தி டும்முறை பாசி வார்ச்சனை விதியு ணர்த்திமேல்.

வேறு.

பொறுதி யாகநாம் புகன்று னக்குமுன்
பெறுதி யென்றமெய்ப் பேறு கொள்கவென்
றிறுதி நீக்குமைந் திருஞ்சா தாக்கியத்
துறுதி லிங்கமொன் றுளிர நல்கினன். (சக)

இரவி மைந்தகே ளிவ்வி லிங்கநீ
யுரிய வாயுள்கா றுருவு றமலே
பரவி நாடொறும் பயில ருச்சனை
வரசி வாகம மரபி னுற்றுதி. (சஉ)

மேவு மிவ்வெலாம் வேந்த நிற்ககக்
காவ லாம்புறக் காவ லாகவிங்
கீவ கொள்கென வேதி கார்முக
மாவ நாழியாங் கவன்கை நல்கினன். (ச௩)

சருவ சத்திமா றுய சங்கா
ரொருவ னேகிக ராய வுத்தமன்
றருச ராசனந் தாவி னுந்தகம்
பொருவி லாவநேர் புகலற் பாலதோ. (சச)

மூன்று நல்கிய முனிவர் சேகர
னன்ற கேள்விய னைய ராமனைச்
சான்ற பஞ்சவ டித்த லத்தைநீ
யேன்று காண்கென வினிது கூறினான். (சரு)

முனிவ ருத்தமன் மொழிந்த செஞ்சொலு
மனைய னங்கிரி யம்பு சாதமுந்
தனது சென்னியிற் றழைப்ப ராகவ
னினிதி றைஞ்சின னேத்தி நின்றனன். (சசு)

பிரிவை நோக்கிடும் பெரிது மேங்கிடும்
வரதன் வாசக மறுக்கொ ணாமையும்
பெரிது நோக்கிடும் பேதுற் றஞ்சுமத்
தரணி பன்றிறஞ் சாற்றெ ணாதரோ. (சஎ)

அரிய நூல்களாய்ந் தகன்தெ ளிந்துமெய்க்
குரவ ரானிறை குணத்தி ராமனே
பெருமி டர்ப்படிற் பெரிய வர்ப்பிரி
வருமை யிற்றென வளக்க லாவதோ. (சஅ)

இருத லைப்படு மிதய ராமனுங்
கொருத லைத்துணிந் தழுவ லன்புளம்
பொருத லைப்பெரும் புணரி வாயனை
மருத லைப்புரீஇ வணங்கி யேகினன். (சகூ)

ஏகி ராகவ னிளவல் சீதையோ
டாகம் வேற்றுமை யறியொ ணாதுநீண்
மாக நீகொன் வழிக டந்துபோ
யோங்கை மிக்கபஞ் சவடி யுற்றனன். (ருo)

வேறு

வரம டுத்தகோ தாவரி மாநதிக்
கரைய டுத்தவப் பஞ்சவ டிக்கணே
புரையி ரித்த புனிதனி ராகவன்
விரவி யொத்துழி வீற்றிருந் தானரோ. (ருக)

அங்க ணேடொறு மைந்தெழுந் தின்செபந்
திங்கள் வேணி யிலிங்க சிவார்ச்சனை
துங்க கீதை பாராயணந் தோமற
நங்கை சானகி நாத னவிற்றுபு. (ருஉ)

நாளு நீளுமெய் யன்பு நதியொடே
யாளு மீச னருட்கடற் புக்குலாய்த்
தாளின் ஞானனந் தத்தனித் தண்சுதை
மீளி யுண்டு விளக்கமிக் கானரோ. (ருங)

இன்ன வாறுசின் ஞள்க ளிரிந்திட
மன்னி ராமனை வாஞ்சித் திராவணன்
பின்னை நேர்ந்து பிதற்றின ளன்னதாற்
றன்ன நாசி தனஞ்சிதை வுற்றனள். (ருச)

அதனா ஞற்கர தூடண ரார்த்தெழ
வதைபு ரிந்தங் கிருதர் வரூதினி
சிதைய வென்றமை தேர்ந்தங் கிராவணன்
கதமி குந்துமா ரீசன்ச காயத்தால். (ருரு)

எரிநெருப்பை மடியிலிட் டாலென
வரிய கற்பிற் கரசி யணுவுந்தற்
பிரியொ ணாத பிரியை சனகியைக்
கரவி லுற்றுக் கவர்ந்தனன் காதகன். (ருசு)

அவனி மாதவ மாய பிராட்டியைக்
கவர்பு சென்றபின் காகுத்தன் றம்பியோ
டவச ஞய்ச்சரித் தங்கதர் காட்டிடச்
சவரி யஞ்சனை தன்றனை யன்றனுள். (ருஎ)

சுக்கி ரீபனைத் துன்னி யவன்பகைத்
தக்க வாலியைத் தான்செகுத் தாங்கவன்
ஒக்க லோடுறு வாழ்வங் குதவவும்
மிக்க பேருத விக்குள் ளுவந்தரோ. (ருஅ)

ராக வன்செய் நலன்மற வாமலன்
போகை யுந்த வுடன்வட மேருமுன்
னாக நீளச லத்தமர் வானர
வாகி னிக்குல முற்றும் வருகென. (ருகூ)

வரவி ளித்துத யாத்த மனவரை
விரவு கீட்டிசை மேற்றிசை யாகநம்
பரமன் வெள்ளிப் பருப்பதங் கூற்றினூர்
வரையி னுத்தர யாமிய வம்புரா. (சூ0)

இடையி டங்களெங் கெங்குந் துருவிநங்
குடிபு ரந்தவிக் கொற்றவன் றேவியைப்
புடவி வாய்த்தபொன் பூங்கொம் பிருப்பிட
முடனறிந் தொல்லை மீள்கென வுய்த்தனன். (சுக)

சென்ற வீரருட் டென்றிசை மாருதி
யன்றி லங்கை யணைக்கணத் தேகினோன்
பொன்றி மேனி யொடுங்கிநின் றுள்ளுயி
ரென்ற ராம னிதயத் திருப்பவும். (சுஉ)

சோக முற்ற தென் றோகை யிராகவ
மேக மின்ப மழைவிளை விற்றரு
மோகை யாரென் றுணர்த்தலி னேங்கும
சோக வின்னிளைச் சூழலி னீழலில். (சுங)

வீற்றி ருந்து மிளிருஞ் சனகியைப்
போற்றி நேர்கண் டணுகிப் புகுந்ததான்
றோற்றி ராகவன் றூதெனத் தெள்ளெனத்
தேற்றி நல்கினன் றீதிறி மோதிரம். (சுச)

வாங்கிச் சென்னிகண் மார்பின் மணந்துகைத்
தாங்கி நோக்குபு தாச ரதிதனை
யாங்க ணேர்ந்தென வன்பிற் பெருகியே
தேங்கு மின்பக் கடலிற் றிளைத்தனள். (சுரு)

வருதி யையவென் மாதவ வாழ்வினை
தருமை மேனி யணுவும் விகற்பியா
துரிய தம்பி யுடனுறை வோடுற்றே
வருவ தேகொ லணித்தமர் வாழ்க்கை யோய். (சுசு

என்ற கேள்விக் கிறைமுறை யேயிசைத்
தன்றி ராமற் களித்தசூ டாமணி
யொன்று கைக்கொண் டுடன்விடை கொண்டுதாழ்ந்
தென்று சேயமைச் செய்தினன் மீண்டபோ. (சுஎ)

கண்டு வந்தனன் காகுத்த தாயினை
யொண்ட ளிர்க்கை யுதவுசூ டாமணி
யெண்ட ரும்பிரிஃ தென்றெதி ரிட்டவள்
கொண்ட நோன்புமுன் யாவையுங் கூறினன். (சுஅ)

ராகவன் மீக்கெழு மூக்கமோ
டனகி யாய சனகி யமர்பிலை
துணையி னேகித் துறுமிடர் மாற்றியாங்
கினிது மீட்டற் கெழுந்தனன் முன்னெழும். (சுகூ)

தம்பி பானு தனைய னனுமனே
பம்பு வானர வீர பதாதியோ
டெம்பர் போற்றுற வொல்லையி னெண்மிறு
னம்பி ராமன் றெறுது நகலையே. (எ0)

வேறு.

ஆர்கரு மறைகள் போற்று மடவியி னகில மீன்ற
தேங்குயாழ் பழித்த வின்சொற் றிருந்திழை பாகத் தெம்மான்
பூங்கழ லிறைஞ்சும் வாஞ்சை புகுத்தவா னரப தாதி
பாங்குற் தவணி ருத்திப் பானுசே யனுமன் றம்பி. (எக)

புடைவரக் குணக்கி னீள்கோ புரப்பெரு வாயின் முன்னர்
படியுற நமந்து வேண்டிப் பரவிப்போய் வேத தீர்த்த
முடியுற வணங்கி மூழ்கி முறையின்வெண் ணீறு கண்டிக்
தொடைபுனைந் தெழுத்தோ ரைந்துந் துகளறச் செபித்த லாதி. (எஉ)

நித்திய நியமம் யாவு நிகழ்த்துபு நிராத்த மாதி
சுத்தகேத் திரபிண் டாதி துரிசறப் புரிபுட் சென்றாங்
கத்தனை யமல வேதா ரணியனை யகில மூல
வித்தனை வீணை கான விதாடணி யுடனி றைஞ்சி. (எரு)

அகநெகிழ்ந் துருக நின்றுங் கருந்துதி பலமுன் கூறி
யிகலருமன் பின்மேலு மிறைஞ்சியாங் கரிது நீங்கித்
தகுமுழி யமர்ந்து வாயு தனயன்முன் னுங்கு ரக்கின்
றொகையினை யாழி மீதோர் தாக்குரம் பிலங்கைக் கேக. (எச)

ஆற்றுக வெனப்ப ணித்தா னுணை தஞ் சென்னி மேற்கொண்
டேற்றெழு கவிக ளெல்லா மிரவிதோ யிரவி வான
மேற்றழை விருக்க மாதி வேரொடும் பிடுங்கிப் போகட்
டேற்றவார் கலியிற் சேதோர் தினத்தினே சனையேழ் செய்தார். (எரு)

வரம்பறு வலிமு கத்த வலிமுக பலசை மூகம்
வரம்பறு பாரை வானீண் மரம்பல சுரும்ப னேகம்
வரம்பறு மாழி மீதோ வாதுவீழ்த் தியவே கத்தால்
வரம்புறு தடையாற் பொங்கி வருபிர ளயமோ வென்ன. (எசு)

பிரவகித் தியாண்டுஞ் சென்றெம் பிரானிகே தனத்தி னீள்கோ
புரதுவா ரத்துஞ் சென்று புகுதவப் பொழுதி யாரு
மரகர முழக்க மேலோ ரார்கலி யென்ன வாய்விட்
*டாகரன் சினக ரத்து ளச்சமுன் னீர்ப்பப் புக்கார். (௭௭)

புக்கவ ரண்டம் விண்டாற் போன்மெனக் கதறு மோதை
யக்கணந் துரத்திச் சென்றாங் கார்கலி கோயில் வாயிற்
றொக்குளார் கலிபே ரோதை சூரலங் கரத்தன் காணு
நக்கன னாரப்பி னான்மன் னரலைநீ வரலை யென்பான். (௭௮)

நந்திநா யகனுங் கார நாதமச் சேது வேறாய்ச்
சிந்திய தகர்த்த தாழி சென்றடங் கிற்று முன்போ
லந்தில்வா னரக ணங்க ளச்சமிக் குலைந்த நோக்கி
னைந்திரா கவன்பின் மேல்பா னான்கியோ சனைசென் றங்கு. (௭௯)

பின்னரு மன்னு கென்றோர் பேரணை யமைப்பித் தான்மற்
றன்னதும் பெருங்கான் மீன்க ளலைகளா னிலைகு லைந்த
தென்னினிப் புரிது மென்னா வேக்கமிக் குளங்க லங்கி
யின்னதென் றொன்றுந் தோன்றா திருந்தன னிராம னந்த. (௮௦)

அம்புதி தடத்தின் பாங்கோ ரகரமீன் பூச லென்ன
விம்பரின் விளங்கும் யாண்டு மிடரற வியல்வான் மீன்க
டம்பெரு வாலிற் சேது தனையடித் துடைத்த நீரா†
னம்பியவ் விராமன் முன்பின் னவிற்றுமக் குரம்பி ரண்டும். (௮௧)

சிதைவுறப் பெற்றும் வாய்மை சிலவுற் குணங்க ளாதி
யிதமிகு புனித ராம னியற்றிய நீரா லன்ன
ததைகுரம் பமைந்த வாழித் தடம்புன லிடமி ரண்டு
துதிதிகழ் கோடி தீர்த்த மெனும்பெயர் துலங்க மன்னும். (௮௨)

முன்னவில் கோடி தீர்த்த முதுமறை வனபு ராணந்
தன்னலன் விரித்துக் கூறத் தயங்கும்பின் னவிறீர்த் தத்தை
மன்னல மணைமேற் கோடி தீர்த்தமென் றுலகம் வாழ்த்தி
யின்னலங் கொழிய மூழ்கி யின்னல மெல்லா மெய்தும். (௮௩)

* அர - குறிற்கீழாகாரங் குறுகிற்று.

† நீரால், விளங்குமென்றியையும்.

அத்திரு மணமேற் கோடி யவிர்தட நகரே மொன்பான்
மெய்த்திரு மணிக டம்முண் மிளிர்குலச் சிறைமா ணிக்க
முத்திசெய் தன்பாற் றோன்று முழுத்தவப் பெருஞ்சீர்த் தென்று
லுய்த்துண ரறிவி லேழை யுரையினு ளடங்கற் பாற்றோ. (அச)

மங்கையர்க் கரசி யாரு மகிழ்நெடு மாற னாரு
மெங்கள்சண் பையர்கோ வும்மே லிசைத்தமா ணிக்கந் தன்னோ
டங்கத னவதா ரச்சீ ரருமையி னுரிமை நோக்கித்
தங்கினீற் றிருந்தார் பன்னா ளென்றிடிற் சான்று வேறென். (அரு)

தன்னிகர் சிவலோ கத்திச் சகத்தையேற் றேணி யாகி
மன்னுமிம் மணமேற் கோடி வளநகர் பாண்டி நன்னாட்
டின்னள வேணி யாகி யிலங்குமீ தமைக வொன்றுந்
தன்னுளந் தோன்ற தங்கட் டங்கிய ராமன் கேட்ப. (அசு)

ஓரச ரீரி ராம வோரச மானு தீத
மாரச சூத கான மாரசங் கார ஞான
காரக *மந்தி ரேசன் காரக மகல நின்று
†தாரக மூல மேநந் தாரக மெனத்து ணிந்து. (அஎ)

நீதின நீதி நந்தா நெறிபுரி செபதி யான
மாதிபி ரீதி யோனு யமர்ந்தன னாத லாலச்
சூதகா னனம்பு குந்தச் சுயம்பமு தேச தேச
மீதெழ வருச்சித் தானுன் வினைழவுமுற் றருளு மென்னு. (அஅ)

வானநின் றெழுந்த தந்த வாக்கிருந் திவ்வி யாமு
தானதொண் செவிவா யுண்டாங் களப்பருங் களிப்புண் மூழ்கி
வானர குழாமி லக்கு மணனருக் கனிலன் சேய்கள்
பானிழ லென்னச் சூழப் படருமா வனச மீபம். (அகூ)

அதனினோ ரிடபங் கான்யாற் றக்கரை யானைக் காமுற்
றதனையவ் வாறு கீறி யடுப்பவா னங்கு நின்று
மெதிர்கரை யேறித் தோழத் தேதற்றொடும் புகுதக் கண்டு
வெதிரிலான் சீதை மீட்சிக் கீதுநன் னிமித்த மென்றான். (கூ0)

* மந்திரேசன்-எழுவாய். அது அடுத்த செய்யுளில் அமர்ந்தனனென்னு முற்றுவினை கொண்டு முடிந்தது.

† தாரகமூலம்-பிரணவசகிதசிவபஞ்சாக்கரம்.

பூங்கொம்பொர் கவிதன் பாங்கர்ப் பொன்னிறம் பழுத்த வின்றே
மாங்கனி கொடுசென் றுற்ற மந்தியை வாவி வீட்டி
யாங்கது கைக்கொண் டேகி யமர்பணை யமரக் கண்டா
னீங்கிது போனி மித்த மெமக்குவே றென்கொ லென்றான். (கக)

செறியுல கடவிக் கெல்லாஞ் சேகர மென்னு மேன்மை
யறிதரத் தெருட்டு சேக ராடவிச் கணிய னாகப்
பெறுபுமாங் குயிலெ லாமெம் பிரானரு ளுவந்தி ராம
வுறுதியிங் குறுதி யென்றாங் கழைத்தென வொலிப்பச் சென்றான். (கஉ)

பூவைபைங் கிள்ளை சாய்ப புராதன புனித னேயா
தேவசங் காசம் பேரசச் சிதாநந்த வமுத நாத
சேவக விமல சோம சேகர மந்தி ரேச
மாவன நிவாச சேச மாதவ பூத நாத. (கந)

கண்ணமர் நெற்றி யானே கந்தர கந்த ரேச
தண்ணம ரிதழி வேணித் தற்பர சைல ராசன்
பெண்ணர சகில மீன்ற பெரியநா யகிச மேத
வண்ணறுஞ் சூத கான வரதவென் றிசைப்பக் கேட்டான். (கச)

இன்னன பலவு மாங்க ளெண்ணில கண்டு கேட்டுப்
பன்னருங் களிப்பு மேன்மேற் பல்கிய போன் புந்த
முன்னரு ளீர்ப்பச் சென்றம் முனிவரின் வருண தீர்த்தந்
தன்னினூன் மூழ்கி னுடைச் * சபாலவெண் ணீறு சாத்தி. (கரு)

கண்டிகை பலபூண் டேடந்தக் கரமுறை செபித்து நீல
கண்டனீ ணிகேத னத்தங் கைத்தளப் பிலகொண் டேகிக்
கண்டருட் டூல லிங்கங் கைதொழு திறைஞ்சி யின்சொற்
கண்டமர் வலவை நேச கணேசனை யிளைய சேயை. (கசு)

பணிந்துநந் தீசற் போற்றிப் பராயனு மதிபெற் றேகித்
தணிந்துசே கரசு கங்கா தரவமு தேச நாம
மணிந்துல கருளா நிற்கு மருந்தினை திருந்து வேதந்
துணிந்துரைப் பரிய சோதி சுயம்பிலிங் கேசற் கண்டான். (கஎ)

---

* முன்னிரு நெடிலுங் குறுகினவாக் கொண்டு சாபால வெனக்கோடலு மொன்று.

காண்டலுங் காண மெல்லாங் கைநெகிழ்ந் திரிய வன்பு
பூண்டவன் றனது போதம் போய்ச்சிவ போத பேத
மாண்டமெய்ஞ் ஞான னந்த மயபர வசனாய் நீண்ட
சேண்டரு வடியிற் றூங்குத் திருமுன நமந்த மர்ந்தான். (கூஅ)

எழுந்தொரு வாறு முன்னின் றியம்புவாய் குழறக் கண்ணீர்
பொழிந்துட னனைப்ப விம்மிப் புரிவதொன் றோர்தல் கூடா
தழுந்துமா னந்த வெள்ளத் தரிதெழும் வழுக்கி வீழ்ந்
தொழுந்தகை யிராம னுங்கச் சுயம்புநே ருற்ற தூய்மை. (கூகூ)

இன்னவா றென்ன யாரே யிசைக்குநர் நெடும்போ திங்ஙன்
பன்னருந் திறத்த மைந்த பானுகு லேச னெம்மான்
றன்னரு ளதனு லாற்று சபரியைத் தொண்டினூர்வந்
துன்னவேண் டுவன வெல்லாந் தோமற வினிதி னீட்டி. (கoo)

உழுவலன் போங்க மேன்மே லுயர்சிவா கமநூ லாற்றின்
வழுவறச் சுத்தி யாதி வயக்கிவெற் பளித்த தாயோ
டழலவிர் மேனி யெந்தை யமுதலிங் கேசன் றூய
கழலடி பூசித் துள்ளங் கரைந்தடிக் கடிந மந்து. (கoக)

திருமுனின் றினிய வாய்மை திகழ்துதி புகன்று வேண்டு
மொருவனே யோவா மூவ ரும்பனே யெம்பி ரானே
யருவனே யுருவ னேதூ யருவுரு வனேய தீதத்
திருவனே சூதகானச் செல்வனே போற்றி போற்றி. (கoஉ)

உலகனே யுலகெ லாமா ளுடையனே விடைய னேயன்
பலகனே யலகி லானே யமலனே விமல வன்பர்க்
கிலகனே யிலகி லானே யேனைய ரெவர்க்கும் யானோர்
திலகனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கoங)

ஆரண முதல்வ போற்றி யாரணன் முடியாய் போற்றி
தாரண நீற்ற போற்றி தாரண பவஞ்ச போற்றி
பாரண காள போற்றி பாரண சூல போற்றி
தேரண வமல கான சேசரச் செல்வ போற்றி. (கoச)

திருவுருப் படிக மோர்வத் திரமது செம்பொ னொன்று
கருமையொன் றருண மொன்று கருதுபா னிறமொன் றூகின்
னுருவமே துணிதல் கூடா துறிலுன சொரூபம் யாரோ
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கoரு)

அவனவ ளதுவென் றன்றென் றருமறை யிசைப்ப துன்னை
யவனவ ளிரண்டு மொன்றி யவிருமோ ருருவாய் நிற்றி
யவனெனப் போற்று கோமற் றவளெனப் போற்று கோமன்
சிவசிவ யாதென் ஹேரர்துஞ் சேகர வனத்தாய் போற்றி. (க0சு)

அரிபிர மேந்தி ராதி யகிலசீ வருமோ ரொன்றே
யுருவமுற் றுதித்துன் பாலே யொடுங்குவ ருவர்க்க தீதப்
பொருளென விருமை யாநின் பொன்னுரு விடத்துங் கண்டுந்
தெருளிலா மூடர்க் கென்றோ தேற்றமா வனத்தாய் போற்றி. (க0எ)

அருநர காழு மூழா லளவில்கா முகனென் றந்தோ
வுருவுகண் டென்னிர் மூடர்க் குரைப்பதெ னூடல் கூட
லொருவடி வினிலெங் கெய்து முணர்த்தினீ யன்றி யாவர்
தெருளுவர் சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கஅ)

சீவர்க ளெவரு மின்பந் திளைத்திட விதஞ்செய் தேவ
பாவியேற் கின்று போந்த படரெலாம் படர வீட்டி
யாவிகாத் தருடி யைய வாணநின் சரண மேமா
தேவனே சூத கானச் செல்வனே போற்றி போற்றி. (கஎ)

வேறு.

என்று போற்றிநின் றடிக்கடி யிறைஞ்சின னிராம
னன்று மாதவ னனியுவந் தமுதலிங் கத்தி
னின்று மிந்தமர் வேணிய னீலமா மிடற்ற
னொன்று நாற்கரன் சாம்பனேற் றிவர்ந்தரு ளொருவன். (கக0)

உளத்தின் மிக்கெழு முவகைநே ருணர்த்துமொண் முறுவல்
வளத்தி னன்சிர மாலிகா பரணன்பால் வண்ணன்
கிளத்து மித்தகு முருவனைக் கிடைத்தனன் றனையுட்
டளத்தி ருத்திரா மனையரு ளுக்குபு சாற்றும். (சகக)

வருதி ராகவ கேண்மியா மலயமா தவன்முன்
கருதி நிற்குணர்த் தியவரு ணெறியதே கவற்சி
தருதி றற்பவ சாகர தாணவாஞ் சையர்க்குச்
சுருதி சொல்லுபா யம்மிது சுத்தநிர்த் தோடம். (ககஉ)

இதயத் தூன்றுக வின்னதே யென்றுமீ திருக்கத்
ததையற் கூந்தலஞ் சானகி பிரிவினிச் சமய
முதயச் சூரனை முகின்மறைத் தாலென வுன்பாற்
றுதையப் பேரிடர் தொலைப்பதற் குபாயமுஞ் சோறும். (ககங)

ஈண்டைக் கோசலை யெட்டினிற் றென்றிசை யிலங்குஞ்
சேண்டக் கார்தொழு தேவிபட் டணத்திரு நகர
மாண்டைக் கேகினீ யலகில்சத் திகளுட னமருந்
தேண்டற் பாலளாம் விந்தையைச் சிந்தைசெய் தன்பால். (ககச)

ஆழி மீதணை யணைதிறன் குறித்தனை யருச்சித்
தாழின் வேண்டுதி யேலணை யுஞற்றுதற் குரிய
பாழி யாற்றறந் தின்னருள் புரிவளப் படியே
வாழி ராமநீ யவ்வழிக் குரம்பினை வயக்கி. (கக௫)

ஆய பேரணை வழிச்செலீஇ யிலங்கையை யடைந்து
தீய ராவண வதம்புரீஇச் சீதையை மீட்டு
மேய விந்திர வரத்தினூற் போர்வயின் விளிந்த
பாய வானர கணமுயிர்த் தெழும்வகை பயிற்றி. (ககசு)

உரிய சீதையோ டிளவல்செங் கதிர்மக னூதை
பிரியன் வானரப் பெருந்தொகை பீடணன் முன்னோர்
விரிபு சூழ்வர விரைகமழ் புட்பக விமானத்
தரிதி வர்ந்துசென் றயோத்தியிற் பரதனோ டமர்ந்தே (ககஎ)

நீதி வேத்தியல் புரிந்துவீற் றிருந்துயிர் நிரைகாத்
தேதி லாமகஞ் சிவப்பிர திட்டைக ளியற்றிக்
கோதி லிச்சிவார்ச் சனைதினம் வழுவறக் குயிற்றிப்
பேதி யாதவிப் பல்வகைப் பெருந்தவப் பேற்றால். (ககஅ)

ஈற்றி னம்பதத் திரண்டறு நித்திய வின்பப்
பேற்றின் வாழ்கென வாய்மலர்ந் தருளியெம் பிரான்முன்
னேற்றி யாங்கருட் குறியிடைக் கரந்தனன் றொழுது
போற்றி ராகவ னளப்பருங் களிப்பெரும் புணரி. (கக௯)

தோய்ந்து மந்திர லிங்கச் சிமத்தொரு தூய்மை
வாய்ந்த லிங்கமார்க் கண்டலிங் கத்தணி வடபா
லாய்ந்து தாபனம் புரிந்தருச் சித்துமீண் டனைபா
லேய்ந்த வாரமு.தேசனைப் பினும்பணிந் தேத்தி. (கஉ0)

பொருமி யன்பின்மிக் கிருகணீர் பொழிந்துள முருகிப்
பிரிவி னைந்தொரு வகைபுற விடையருள் பெற்றாங்
கரிது போந்துகோ யிலின்புறத் தொருசிறை யடுத்தவ்
வரன தேவிபட் டணம்புக மதித்தவ ணிருந்தான். (கஉக)

வேறு.

ஈதிவ்வா றாக விதற்குமு னிளவ லிரவிசே யனுமன்சாம் புவனே
யாதிய ரங்காங் கருட்குறி நிறுவி யருச்சனை புரிந்துவந் தடுத்தா
ரோதவற் றிலக்கு மணனருச் சித்த வோரருட் குறியமு தேச
சேதனசுயம்புலிங் கத்தின்றென் மேற்றிசையினுற்குரோசத்திற்றிகழும். ()

நவிலுமக் குறிவாழ் நகரந்தம் பிக்கு நல்லவன் கோட்டையென் றுமத்[யோர்
தவிர்தரு மதன்கிட் டிசையின்மூக் குரோசத் தமுதலிங் கேசதென் றிசை
திவள்குரோ சத்தி னெல்லையிற் றிகழுந் திருத்தகு சுககிரீ வன்செ
யுவமைதீர்லிங்கமுவ்விட முத்துப்பேட்டையென்றுரைப்பநின் றருளிரும்.

திருந்துபூ சனைசெய் சுக்கிரீ வன்றன் றிருமு னின் றருந்துதி செயுங்காற்
பெருந்தகை யிலிங்கத் தொள்ளொளிப் பொலியும் போழ கமைதியு நோக்கண்
டருந்துணை யெந்தா யருட்டிரு மேனி யழகனே யென்றகா ரணப்பேர்
பொருந்தியே யொளிகள் நகரிலா தோங்கிப் பொலிதனேர்காணலாமின்றும்

அத்திரு மேனி யழகனுக் கிசைந்த வழகியெம் மன்னையு மனைய
துத்திய நாயந் தான்வடி வழகி யென்றுல கிறைஞ்சிடத் துலங்கு
மத்திரு மேனி யழகனு மனையு மேத்துநர்க் கருணலங் களுமவ்
வுத்தம தலத்தின் சிறப்புமோ ரளப்பின் றுரைத்தவப் பெரும்பதிக்கீழ்பால்.

வருமொரு குரோசத் தெல்லையிற் சாம்பு வன்றெருமுவ குறியிலங் கிடுமவ்
விருநகர் நாமஞ் சாம்புவ னோடை யெனப்பொலிந் திலங்குமிவ் வகையே
யொருவிலோ ரொருவ ரும்புரி யிலிங்க முலப்பில பலப்பல நகரின்
மருவி னின் றிலங்கு மேலினி ராமன் மதித்தவா புரிசெயல் வகுப்பாம். ()

இளவலோ டனுமன் சுக்கிரீ வன்மற் றேவரு மேவரத் தேவி
வளநகர்க் கேகி மந்திர நாதன் வழங்கருள் வழிகுரம் பியற்றிக்
கிளர்தரு மிலங்கை புக்கிரா வணன்மூற் கெழுமுபன் னிருதலைப் பொருதக்
களனுற வீட்டி ராவணப் பிரம கத்திரா மேச்சுர மாகும். (கஉஎ)

மாதலத் திராம லிங்கதா பனத்தான் மாற்றுபு வீபகத் தியினை
வேதகா னனத்தைங் கரத்தொரு கோட்டு விமலபூ சனையினுல் விலக்கிக்
காதமர் குடந்கா தவனிழ லானைக் காவிறை பூசையாற் கடிந்து
கோதற வயோத்தி புக்கமு தேசன் குளிர்திரு வருணணி குலாவ. (கஉ அ)

மலயமா தவன்றன் பதமலர் சிரமேன் மலரவீற் றிருந்தரு ணெறியே
யுலகெலாம் புரந்து சிவார்ச்சனை யாதி யுத்தம நெறிவழு வாது
நிலவிய வியற்றி வாழ்ந்தன னவற்கு நிமிலமந் திரவுப தேச
வலனளித் தமையாற் சூதவ னேசன் மந்திரே சப்பெயர் வாய்ந்தான். (கஉக)

அன்னமா வனமல் விராமன்சா னகியை யடுத்துமீட் பதற்குள வுபாய
மென்னென வுசாவி யெம்பிரா னருளா லெண்ணியாங்கெய்துதற் கிடனாய்
மன்னிய வதனாற் றிருவுசாத் தான வண்பெயர் பெற்றதான் மலபோன்
றன்னருந் தனய வென்றுவேத் திரக்கைச் சற்குரு நாதனே தினனுல். ()

வேறு.

என்றருணந்தி வாய்மை யிருஞ்சனற் குமரன் கேட்டாங்
கொன்றிய வளத்த னாகி யுத்தம குரவ ரேறே
நின்றனி ருகாம்பு சாத நிறைசொற்றே னுகர்ந்து மேலு
நன்றறி வார்வங் கூர்வ நாடுமென னெஞ்ச மன்னே. (௧௩௧)

இன்னுமிச் சூத கானத் திறைவனை யிறைஞ்சி யாவர்
துன்னுதம் மிட்ட சித்தி தோய்ந்தன ரெங்கை யாற்றும்
பன்னருள் விளக்கம் யாவை பகர்ந்தருள் பெரும வென்றான்
மன்னருணந்தி நாதன் வாய்மலர்ந் தருளு மாதோ. (௧௩௨)

அருந்தவ முனிவ கேண்முன் னனந்த தாண்ட வத்திற்
புரிந்தெழு மனத்தன் காதி புதல்வன்பொன் மன்றி னின்று
பெருந்திரு நடஞ்செ யீசன் பிரசமென் மலர்த்தாள் பேணித்
திருந்தருந் தவம்பல் காலஞ் செய்துவேட் டமர்ந்தா னன்றே. (௧௩௩)

அன்னவன் றவக்கி ரங்கி யருட்டில்லை யம்பலத்திற்
பொன்னடம் புரியெம் மான்முன் போந்தருள் கூர்ந்து காதி
தன்னரும் புதல்வ நீசெய் தவம்பெரி துவந்தும் வேட்ட
தென்னுரை யென்னத் தாழ்ந்திட் டிருகைகூம் புறநின் றோதும். ()

யாவரு முணர்த றேற்றா விறைவனே யேழை நாயேன்
றாவரு நின்னா னந்த தாண்டவ தெரிச னத்தின்
மேவிய மனந்து ரப்ப விழைந்தனை யடைந்து ளேன்மா
தேவநின் றிருவு ளத்தின் செயலென விறைஞ்சி நின்றான். (௧௩௫)

வருதிகோ சிகனே யிந்த வரம்பெறு சிதம்ப ரத்திற்
பெரிதுள வுவந்து முன்னாட் பேணிரு முனிவர்க் கல்லாற்
புரிதரு நடமின் றாற்றென் புண்ணியந் தடத்து நல்லோர்
கருதுமோர் நறிய சூத கானன மிலகு மாங்கே. (௧௩௬)

நீவிழை நடனங் காட்டி னினக்கருள் புரிது மென்றே
யேவிய நமது போற்றி யெம்பிரான் விடைபெற் றேகி
மாவனம் புகுந்து கோசி கன்மனங் கரைந்து வாழ்த்தி
யோவறு தடம்புக் காடி யோதிய பூதி யாடி. (௧௩௭)

கண்மணி புனைந்து பஞ்சாக் கரங்கருத் துறச்செபித்து
வண்மணிக் கோயில் புக்கு மந்திரேச் சுரன்வான் போற்று
மொண்மணி கண்டன் முன்சென் றுளநெகிழ்ந் துருக வேத்தித்
தண்மணிக் கழலி றைஞ்சித் தாண்டவம் விழைந்தி ருந்தான். (கங அ)

முன்னருள் புரிந்தாங் கன்ன முனிவற்கு நடன நாதன்
றன்னருட் பெருக்கி னலத் தாண்டவந் தரிசிப் பித்தான்
பன்னரும் பரமா னந்தப் பரவையுட் படிந்து பல்வே
றின்னருட் டுதிகள் கூறி யடிக்கடி யிறைஞ்சி வாழ்ந்தான். (கங கூ)

இறையவ யார்க்குங் கிட்டா விப்பெரு நடனு நாயேன்
குறைதப வளித்தா யெந்தாய் கோதிலா வருட்பெ ருக்கி
னிறைவெவர் சொல்ல வல்லார் நீசன்செய் கையா துண்டோ
மறையெலா மளப்பி லாத வள்ளலே யென்று தாழ்ந்தான். (கசய)

அளவிலா னந்த மிக்கூர்ந் தனையனு டோறு மன்ன
பளிலா ரோது சூத பாதவ கானத் தாலங்
களனிலா வண்ணல் பாதங் கைதொழு தயர்ந்தான் பன்னாள்
வளனுலாம் புன்னை வேலி மறைவனத் தடைந்தான் பின்னாள். (கசக)

கோசிக னடங்கண் டன்பு கொண்டுவாழ் காதை யீதான்
மாசறு தவத்தோய் பானு மதிமுத லொன்பான் கோள்கள்
பேசுமிவ் வனத்தோர் காலெம் பிரானடி பணிந்து போற்றித்
தேசுறு தவஞ்செய் திட்ட சித்திபெற் றருளின் வாழ்ந்தார். (கசஉ)

உத்தம முனிவ வேறொன் றுரைத்துநீ யுற்றுக் கேண்மோ
முத்தொழின் மேத்தி வாய்ந்த முதுதொழிற் றிதிசெய் தேவன்
றத்துவ மார்க்கம் யார்க்குஞ் சாற்றுமா குரவன் வாய்மை
யுய்த்துணர் மறைநான் காதி யுள்ளவா றுணர்ந்த மேலோன். (கசங)

இப்பெருந் தலைவ னுயு மிந்திரை கேள்வ னூழி
னப்பெரு வலிக டத்தற் கருமையா லாதி நாளிற்
றுப்புறு மசுரற் காற்றாச் சுரர்கட லமுதுண் டாற்றல்
கைப்பெறு மாபா லாழி கடைந்திடத் தொடங்குங் காலை. (கசச)

விக்கின நீக்க லாக்கல் விளைத்திடும் பெரிய தேவை
யக்கணம் பூசித் தேத்த வயர்த்தமு துணவின் வாஞ்சை
மிக்கெழ வமரர் சூழ வேண்டும்பல் கருவி கூட்டித்
தக்கபா லாழி மாலோன் முன்கடைந் தியல வாங்கே. (கசரு)

இந்திரை யிந்தி ராணி யிலங்குவெள் ளிபமுன் னாவ
வந்துவந் தெழலு மீது மற்றெமக் கெமக்கென் றோதி
முந்துமுந் தொவ்வொன் றாக முற்றும்பெற் றுளங்க ளித்தார்
சிந்தனை விழைந்த வாறத் தெள்ளமு தெழக்காண் கில்லார். (௧௪௬)

மெய்விசைத் தீர்த்து வானோர் விசைதரக் கடைந்தா ரற்றாற்
பைவிரி யரவாற் றாதப் பரவையும் வறப்பத் தன்வாய்
மைவிரி யாலங் கால மற்றெமக் கெமக்கென் றோர்முன்
கைவிரித் துதறி யஞ்சிக் கால்விசை கால்வி சைத்தே. (௧௪௭)

முழுவிசை யிதுவே யென்ன முற்றொருங் கோடி னாரப்
பொழுதிறை பாணித் தான்யா னணித்தான் பொருக்கென் றோடா
வழுவினவ் வால மீற்றின் வன்னியிற் சுடவெண் மேனி
பழுதுறீஇக் கரிய னாகிப் படர்கதி வலியி னுய்ந்தான். (௧௪௮)

வருவிடந் துரப்பச் சென்ற மாயன்முன் வானோ ரச்ச
மொருவிடா தோடி யோடி யுலகெலா முழன்று மந்தோ
வெருவிட மன்றி யாண்டும் வேற்றிட மின்றி நைந்து
பொருவிடை யமலன் முக்கட் புராரிபே ரருள்கை கூட. (௧௪௯)

அடுத்தவ ரிடுக்கண் டீர்க்கு மமுதசஞ் சீவி யாயிப்
படிக்கணே வயங்குஞ் சூத பாதவ கானத் தெய்தி
நடுக்கமுற் றொழிந்து கீழைக் கோபுர வாயி னண்ணிப்
பொடிக்கொள்பொன் மேனி யெம்மான் கோயிலுட் புக்கோ லிட்டார்.

அண்ணலெம் மந்தி பேச னடியின்கீ ழலறி வீழ்ந்தா
ருண்ணெகிழ்ந் துருகு மாயோ னோதுமீ தும்பர் கோவே
துண்ணென விரிந்த நஞ்சந் துரப்பநொந் தலைந்தா கூழிற்
றண்ணரு ளீர்ப்பப் போந்துன் சந்நிதி யடைந்தே மெந்தாய். (௧௫௧)

ஒருகணந் தாழ்க்கி னெம்மை யுடன்றுடன் றொலைக்கு நஞ்சம்
வருகண மீற்றி லாடு மயானமித் தான மாகிப்
பெருகண வுசாத்தா னப்பேர் பிரியுமால் விரியு நஞ்ச
மருகண வுறாம லெம்மை யளித்தியா லருளின் வள்ளால். (௧௫௨)

வேறு.

என்று மாதவ னிணையடி மாதவ னிறைஞ்சி
நின்று வேண்டலு நின்மல னாரரு ணிலையாற்
றென்றி சாமுக வாயிலின் வழிவெளிச் சென்று
பொன்று முத்திறல் வைரவச் செம்மன்மேற் றிசைபோய். (௧௫௩)

ஐங்கு ரோசத்தி னெல்லையி னவ்விட மமரா
ரெங்கு ளாரென வினவலிற் கொதித்திரைந் தெழலுஞ்
சிசங்கை நீட்டிபு கவர்ந்தனன் றிருவுசாத் தானத்
தங்க ணுதனு யிடைப்புக வருட்கரத் தளித்தான். (௧௫௪)

அனைய வல்விட மங்கையி னங்கயின் றகில
நினைய நீலகண் டேசநா மங்கொடந் நிலையிற்
புனைய ருட்டிருக் கோயில்கொண் டருளியப் புராரி
யெனையு மாள்பரன் வீற்றிருந் தருளுவா னென்றும். (௧௫௫)

இந்த மாதலத் தவ்விட மெந்தைகை யளித்த
மைந்த னும்வடு கேசன்றன் மாதிர முகனு
மெந்த நாளுமத் தளியில்வீற் றிருந்தருள் புரியு
மந்த நற்றலத் துற்றருள் பெற்றுளா ரனேகர். (௧௫௬)

இன்ன நற்றலந் தாமரங் கோட்டையென் றிசைப்ப
வின்ன தியாவையுந் தருமய னகரின்பிக் கிலங்கு
மன்னு சீகண்ட நாதனுங் கருள்செயல் வாம
மன்னு தாயறம் வளர்த்தநா யகிபெயர் வயக்கும். (௧௫௭)

அறம்வ ளர்ப்பது நாமிரு நாழிநெல் லாலெத்
திறனி வர்க்கொடச் செயல்விரிக் குதுமெனத் தெளிந்தம்
முறைய ளித்தநெல் லாலுல கூட்டிபூ தருசீர்
நிறைவ ளத்தவே ளாளர்கூட் டம்மவ ணிலாவும். (௧௫௮)

என்னை யாளறம் வளர்த்தவ ளெண்ணிய செயலை
முன்னி யாங்குமுற் றினரிவர் முதத்தினெம் மணித்தாய்
மன்னி வாழ்கெனத் திருவுளங் கொண்டமாண் பாலோ
வன்னர் கூட்டமிக் கவிருமந் நகருமப் பாங்கும். (௧௫௯)

விடம யின்றருள் ளண்ணறன் சூதமா விபினத்
திடைமி டைந்தமான் முதலினோர்க் கருள்புரிந் தினிநீர்
கடந்க டைந்திடிற் கணேசனைப் பூசித்தே கடைமி
னிடரொ ழிந்திடுஞ் சென்மினென் றிசைத்தன னெம்மான். (௧௬0)

அன்ன வாறருட் டலைக்கொடு மான்முத லமரர்
நன்ன ரேகின ரயன்றிருக் குமரமே னலங்கேண்
முன்ன ரோர்பகற் கௌதமன் மனுவிறை முளரி
யன்ன சேவடி பணிந்தக லிகைத்தனை யடைந்தான். (௧௬௧)

குருகு லத்தினில் வருதிற லொருகுலக் கோமா
னுருகு மன்பினிம் மந்திரேச் சுரனடி யுன்னிப்
பெருகு பூசனைப் பேற்றின்வா னுருப்பசி பிரியா
தருகு வாழ்மனை யாப்பெறீஇ யின்பமுற் றமர்ந்தான். (௧௯௨)

சசிமு கத்துவான் சசிமுனு ணகுடன்றற் சார
நசைமி குத்தமை யுணர்ந்தொரீஇ வெரீஇயிவ ணண்ணிப்
பசைமி குத்துள மந்திரேச் சுரனடி பணிந்தே
வுசைமி குத்தவந் நகுடற்கு விபத்தினை வழங்கி. (௧௯௩)

அண்ணன் மந்திரேச் சுரனருள் பெற்றினி தடைந்து
விண்ணி லாகண்ட லன்றனை வேட்டெதி ருவப்ப
வுண்ணி லாவுமின் புறப்பொலிந் துடன்றழீஇ யமர்ந்தா
ளெண்ணி யிந்திரன் மந்திரேச சுரனடி யிறைஞ்சி. (௧௯௪)

அருள்பெற் றுங்கெதிர் விருத்திரற் றடிந்தினி தயர்ந்தான்
றெருள்செ யாயுள்வே தியர்களச் சுவினிதே யிருவர்
மருவி மந்திரேச் சுரனடி வழுத்திவா னவரோ
டொருவு றுதவிப் பாகநேர் பெற்றினி துவந்தார். (௧௯௫)

வேறு.

இப்படி யளப்பி லாதா ரிணையடி சூத கானத்
தப்படி முடியாற் போற்றி யடிக்கடி மலர்வாழ் வுற்று
ரெப்படி யுரைப்ப தெம்மா லிருட்கடி மனத்தோ யென்றுன்
றப்படி வேணி நந்தி தொழுதடி பரவிக் கேட்டான். (௧௯௬)

ஆயசீர்ச் சனற்கு மார னூரிர வனத்தெம் பெம்மான்
றூயமான் மியத்தின் மேன்மேற் றொடர்ந்தெழு மார்வந் தூண்ட
மாயன்முன் மந்தி ரேசன் வாரிமா முகற்பூ சித்தே
நீயரி கடைசென் றேய ஈறையருள் பெற்று னன்றே. (௧௯௭)

பின்னரம் முராரி செய்த பெற்றியெ னுற்ற தென்செ
லன்னது மருடி யாமோ வண்ணலென் றடியிற் றுழ்ந்தான்
மன்னரு ணந்தி யெந்தை மற்றவற் கவைவி ரித்துச்
சொன்னவா கேண்மி னென்னச் சூதன்மா தவர்கட் கோதும். (௧௯௮)

வேறு.

அளியி னீடிய ராகவ னஞர்முன் வீடியவாழ்வுற வருள் செய் காதையை யாதிய, வொளிரி மான்மிய மோதின ருடனன்வி னுயினர் நீள்பங்க யொரு வொ றுவிட மாதிய, பளகெ லாமெளி தோடிய படியில் சீரெழி லார்மனை பலம காமுத லாதிக, வளனு லாவபல் போகமு மருவி யேசிவ ஞானமெய் வழிசெல் வாரொரு வீடரோ. (௧௯௯)

இராமன் மந்திரோபதேசம்பெற்ற சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௩௫.

# அமுத நிவேதனச் சருக்கம்.

தசரதன் மைந்த னுனமீளி தளர்வொழி புய்ந்து நீடுவாழ்வி
னிசைதரு மந்தி ரோபதேச மினிதுறு நன்றி யோதினுமுன்
னசையமு தங்கொ ணுமுராரி நசமகள் கொண்க னார்முனியு
நிசசரி தஞ்சொல் வாமெனுவு ணிகழ்தர நந்தி நாதனோதும். (க)

வேறு.

சூதவன நாத னமர் தூச்சரிதத் திடைமேன்மேற்
காதல்வளர் சனற்குமர கரிசனுமா தவகேண்முன்
மாதவனெம் பிரானளித்த மல்லருடன் றலைநிறைவைத
தாதரமிக் குறுதியினி யமுதுறுதி யெனச்சூழும். (உ)

சுராசுரர் குழாந்தொடரத் தும்பிமுக நம்பியிரு
வரகமல மலரடிகண் மறவாம லுறவாழ்த்திப்
பரவுபொருள் பலகொடுசெ பரியைவிதி வழியாற்றிச்
கரமலரஞ் சலிமுடிமேற் கவினுறநின் றனனறுதிப்பான். (ங)

பிரணவமாந் தனிக்கூடம் பெயராத குஞ்சரமே
பிரணவமா மாளானம் பிரியாத புகர்முகமே
பிரணவமா மலர்வாவிப் பெரிதாடும் போதகமே
பிரணவமாஞ் சேவகத்திற் பிறங்குமணி வாரணமே. (ச)

ஓங்கார வோங்கலகத் துதித்துலவுங் கிரிசரமே
யோங்காரத் தீங்குடிலை யுள்ளவிரு நதிசரமே
யோங்காரத் தேங்கான மொருவாத வனசரமே
யோங்காரப் பெருவீதி யுலாவருதந் தாவளமே. (ரு)

தாரகமே முகமாகத் தயங்குபெரு மதங்கயமே
தாரகமே திருவுருவாத் தனிவிளக்கு மாதிரமே
தாரகமாம் பிடிகளிற்றிற் றனியெழுந்த கயமுனியே
தாரகத்தி னுள்ளுயிராய்த் தணவரிய குணகரியே. (சு)

திருவருளா மதவெள்ளந் திரைகொழிக்குங் கரவரையே
கிரியையறி விச்சையெனுங் கிளர்மதமூன் றொழுக்கிபமே
யிரவுபக லற்றொளிரு மிடத்தமருங் கடக்களிறே
வரவொடுபோக் கிலாதெங்கு மருவிநிறை மதாவளமே. (எ)

பரவுமலப் பெருஞ்சேற்றைப் படர்ந்துழக்குங் கறையடியே
விரவுபவப் பெருங்காட்டை விரைந்தழிக்கும் புழைக்கரமே
வரவயிரா வணமுகைத்து வருங்களப நால்வாயே
யரவுதர பந்தனமா யார்த்தபெருஞ் சீர்த்தகரே. (௮)

ஐங்கரநால் வாய்முக்க ணருளிருதா ளொருமுனியே
சங்கரனீள் சடைக்காட்டிற் றனிவிளையாட் டியல்கயமே
கங்கையுத கம்புழைக்கைக் கவர்ந்திறைக்குங் கயந்தலையே
செங்கமலைக் கோளரியோ டுடனுதித்த சிந்துரமே. (௯)

மறைமுடிப்பாந் துறையினடி மலர்சாத்துந் துடியடியே
மறையணிநூ புரமாக வளையணிமா வேழமே
மறைபுகன்மூ லப்பொருளா வழுத்தியன்மா தங்கமே
மறையுமுணு குதற்கருஞ்சீர் வளர்களப வேசரமே. (௧௦)

கணராச குணராச கலராச புவிராச
பணராச சடிலமகி பதிராச நிதிராச
வணராச மலரிதழி வனைராச வனைவல்லை
மணராச துணர்வாச மலரடிக ளிணை போற்றி. (௧௧)

அகிலமெலா முபக்கிரமத் தன்பிணியை யேயிறைஞ்சத்
தகவுறுமச் செயன்முழுதுந் தனிமுடிப்பாய் வனிமுடிப்பாய்
திகழுறயாந் தொடங்குறுமிச் செயன்முடிப்பாய் பயமொழித்தெம்
பகவதிரு வருள்பொழிபூம் பதத்துணையே துணையென்றே. (௧௨)

இன்னனபஃ றுதிபுகன்றவ் விறையருளா னிறையுவகை
துன்னியசென் றம்முகுந்தன் குதவன நாதனடி
சென்னியுற வுறவாத சிந்தையனாய்ப் பாலாழி
முன்னிலையிற் சுராசுரரான் மோதமுறக் கடைவித்தான். (௧௩)

ஆங்கெழுந்த தினியசுவை யாரமுத மதுகடத்தின்
பாங்குறப்பூ ரிதம்புரிந்து பாங்குறவைத் தனன்பின்னர்த்
தேங்குசுரா சுரரனைய திருமார்ப னடிதாழ்ந்திவ்
வோங்கமுத முறைபகிர்ந்திங் குதவிகென வேண்டினரால். (௧௪)

அதுவினவு மரியவரை யழைத்தசுர சுரகுலங்காள்
விதுமுடியாம் பிரவனத்தெம் விமலனரு ளாலிந்த
முதுசுவையா ரமுதெமக்கு முற்றுறப்பெற் றனமவனுக்
கிதுமனிவே தனம்புரிந்தவ் விரும்பிரசா தங்கொளலே. (௧௫)

மரபாகும் பொறுத்திருமின் வல்லையமு தளிப்பலென
வுரையாடி யமுதகட மொருங்குடன்கைக் கொண்டேகி
விரையார்தண் சூதவனம் விரையாவத் தனையசுவைச்
சுரையார்பொற் றசும்பொருபாற் றுரிசறவைத் தமுதேசன். (௧௬)

கழன்மறவா மனத்தொடுமொர்க் கண்டதோ யந்தோய்ந்து
நிழன்மறையாக் கண்டிகைவெண் ணீறணிந்தைந் தெழுத்தோதிப்
பழமறைபோற் றருமமுத பரமசுயம் பிலிங்கேசற்
றொழுன்முறையா னயந்தேத்தித் தூநறுமா மலராதி. (௧௭)

அருச்சனைக்காம் பொருள்பலவு மமைத்தடிபூ சித்தனைய
மருச்சுவைத்தண் ணமுதகட மலிதரநேர் வைத்தண்ணல்
கருச்சுழியி னுருதருட்செங் கைந்நீட்டி யெமையெடுக்குந்
திருச்சுடரே யமுதேசா சிறியோமன் றிருவருளால். (௧௮)

ஆழிகடைந் தெடுத்ததிரு வமுதிதுநஞ் சமுதாக்கொள்
வாழிதிருக் குமுதமலர் மதுவாக்கொண் டருளியெம
பாழிவினை யொழித்தினருள் பாலியெனப் பன்முறைதாழ்ந்
தேழிசைமா மறையனந்த மெடுத்தேத்தி யெதிரிறைஞ்சி. (௧௯)

பூசனைமுற் றுறமுடித்தப் புனிதந்வே தனவமுத
நேசனையாச் சண்டேசர்க் குளபாக நிவேதனஞ்செய்
தீசனைநல் வாசனையா ரிதழிமதி நதிவேணித்
தேசனைமீட் டிம்பாவிச் சென்றனனவ் வமுதியென்றும். (௨௦)

அன்னதிரு வமுதநுகர்ந் ததனாலோ வதுமேனித்
துன்னியோ முற்கலுழன் றனையமுதத் துளியாலோ
மன்னமிர்தந் தருதானவ் வடிவினுணர்த் திடவதுவாய்
முன்னரே முளைத்தெழுந்த முறையேயோ நாமறியோம். (௨௧)

அத்தகைய மாவனத்தவ் வருளிலிங்க மமுதமய
சுத்தவடி வாகவே துலங்கியொளிர் தருமென்றும்
வித்தகவே ளவ்வமுத மிளிர்கடங்கொண் டேகியமால்
கொத்தசுர ருணிலமரர் குலக்கிடரா மெனக்குறித்தே. (௨௨)

அவ்வசுரர் தமைவஞ்சித் தமரருக்கே யமுதமளித்
தொவ்வரும்பாற் கடலடைந்தாங் குரகபதிக் கொளிர்சூத
திவ்வியகான் விடந்துரத்தச் சென்றதுமந் திரநாதன்
றெவ்விடமுண் டியிரளித்த திருவருளு மதன்மேலும். (௨௩)

எண்ணியவா றமுதுகொளற் கிடர்புகுதா வுபாயமினி
துண்ணிலவ வுரைத்தருளி யுதுகிடைப்பித் தருளியதுந்
தண்ணியவின் னமுதநிவே தனங்கொண்டு பிரசாத
மண்ணலரு டாப்பெற்ருங் கமாருண வளித்ததுவும். (௨௪)

ஆதியவச் சூதவனத் தமுதேச னருளனைத்து
மோதியமர்ந் தனன்கேட்ட வமரேச ஞேதியுளத்
தாதாமிக் குறைத்திடின் றமுதேச தெரிசனமெய்ப்
போதுகிடைத் திடினுமென் றப்பரமன் பதப்போதே. (௨௫)

மனத்திருத்தி வேண்டியவா மமுதன்பர்க் கருடொழிலோய்
கனத்திருத்தி வைத்தமணி கண்டவெனக் கஞ்சலைநீ
யெனத்திருத்தி யுறவருளி யெளியேனைக் குளிர்சூத
வனத்திருத்தி நின்காட்சி வழங்கியநான் பெறுவேனே. (௨௬)

என்றுரைத்தங் கன்புநனி யெழுந்துசெல வினிதிருந்தா
னென்றுரைத்த நந்திகழ லிறைஞ்சியவம் முனிக்கதன்மே
னன்றுரைத்த வாறுமக்கு நாமுரைத்தல் கேண்மினென
நன்றுரைத்த வச்சூத நற்றவர்சோ னயந்துரைக்கும். (௨௭)

வேறு.

முகுந்த னுதவுநி வேதனு மமுதங்கொள் சரிதமி தோதினோ
ருகந்து வினவிய சீரினோ ருளங்கொள் செயல்கள்கை கூடுவார்
மிகுந்து வளரிக வாழ்வெலாம் விழைந்த படிநுகர் வார்பினீள்
சுகந்த மலரடி நீழல்வாழ் துலங்கு சிவகதி சேர்வரே. (௨௮)

அமுதநிவேதனச்சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௲௮௪.

# இந்திரன் றிருவிழாச் சருக்கம்.

சந்திர சேகர னாமு தங்கொள மாலருள் சீரிது
மிந்திர நாதனு லாவரு மங்கல நீடுவி ழாமுறை
யிந்திர னேதக வேபுரி யின்பினி யோதுது நாமென
நந்திரள் பாதக மோசக நந்திபி ரானவில் வானரோ. (௧)

வேறு.

மைந்தகே ளனந்த ஞங்கு வந்தமு தேசற் கந்நாண்
மைந்தம ரிராச சூடா மணியெனும் வளவற் கூய
மைந்தபல் வளந்து வனற மரபினி லுவகை மல்கி
* மைந்தறப் புரிம கோற்ச வத்திரு மாண்பு முற்றும். (௨)

வானநா டளிக்குஞ் சீர்த்தி மகபதி யுணர்ந்து சூத
கானநா டளிக்கு ணத்திற் கனிந்தமு தேசன்காள
பானஞ டளிக்குட் போந்து பாவியத் திருவி ழாச்சீர்
மேனஞ டளிக்கு லாவ விழுத்தக விதியாற் செய்தான். (௩)

அனந்தன்முன் னியற்று வித்தாங் கனந்தரம் வலாரி யாற்றும்
வனந்தரு மனைய வாய்மை மகோற்சவத் திறஞ்சொல் வாமென்
றினந்தரு முனிவர் வானோ ரேனையர் தமையோ துக்குங்
கனங்கூர்ந் வேத்தி ரக்கைக் கண்ணுதல் கழறு கிற்கும். (௪)

வினவுதி சனற்கு மார வித்தக முனிவ ரேறே
யனகனும் பனக வேந்த ஞற்றுமத திருவி ழாச்சீர்
தனகமோர்ந் தெழுசு நாசி தண்ணரு ளமுத நாதன்
கனகவம் போரு கப்பூங் கழற்பதி கருத்த ஞகி. (௫)

தழைத்தெழு மன்பு முன்போ தரச்சதா கதியைத் தன்முன்
னழைத்தனி லேச கேட்டி யாம்பிர கானத் தெம்முட்
குழைத்தரு ஞருவாய் மன்னுங் குலவமு தேசற் கிந்நாண்
மழைத்தரு சைத்தி ரோற்ச வம்புரி வாஞ்சை யுற்றாம். (௬)

ஆதலி னமுத சூத வணிவனம் விரையச் சென்று
காதலி ஞங்கு முன்னர்க் கவினிறை செயல்க ளெல்லா
மோதலி னதிக மென்ன வுஞற்றுகென் றனன்கேட் டாங்குப்
போதலி ஞர்வ மிக்குப் பொருக்கென வெழுந்தான் மன்னோ. (௭)

ஆசுக மளிப்ப திந்த வருட்சிவ பணியே யன்றோ
வாசுக† மளித்து மாற்று மழுதலிங் கேச னம்பா
லாசுக வளிப்பா ஞக வருட்டொடர் பிணித்தான் போன்மென்
றாசுக வேந்தன் மீதூ ரார்வமுந் துறச்செல் கின்றான். (௮)

---

* மைந்து - மயக்கம்.

† உகம் - உலகம்.

செல்வழி மயற்கூ யீது செப்பும்வான் றபதி கேட்டி
மல்வரு சைத்தி ரோற்ச வந்தனிச் சூத கானத்
தெல்வள ரமுத நாதற் கியற்றிய விழைந்து மாங்கட்
பல்வகை யணிகண் முன்போய்ப் பயிற்றுதி வல்லை யென்று. (கூ)

இந்திர னாணை யாமீ தென்பது மிசைத்தான் கேட்ட
தந்திர வழிசார் பெல்லாந் தணவறத் தெளிவான் றச்சன்
மந்திர நாதன் சூத வனத்துட னனுச ரோடும்
வந்திர வகற்று ஞாய மார்க்கண்ட தோயந் தோய்ந்து. (க0)

தளிபுகுந் தமுத நாதன் சந்நிதி தாழ்ந்தி றைஞ்சி
யளிமிகுந் தூநதத் தான்முன் னுற்றுமக் கோயிலெல்லாங்
களிமிகுந் தெழில்வி னைக்குங் காண்முனை தன்னைக் கண்டாங்
கொளிபுகுந் திழுக்கக் கண்ணுற் றுரைப்பரு முவகை கூர்ந்தான். (கக)

இயலெழி லுலகை மெல்லா மிலங்கினு மிளஞ்சேய்க் கினரேர்
செயலெழில் புணர்ப்பர் காதற் றிறத்தினச் செய்தி போல
வயலெழில் வேண்டா தென்று மவிருமத் திருக்கோ யிற்கு
வியலெழில் வகைக ளெல்லாம் விழுத்தக விழைந்து செய்வான். (கஉ)

நவின்முதற் கோபு ரம்முன் னந்திமண் டபத்து நீசி
யவிர்திசை யிடைவ சந்த மண்டபத் தகத்தி டைக்க
ணுவமனெவ் வுலகத் துள்ளு முள்ளதன் றிதற்கென் றேதத்
திவியமா மணிப்பொன் வேதி சிற்பநூ றிகழக் கண்டான். (கங)

நலவொளி வயிரத் தம்ப நிரையதி னிறுவி மேனின்
றிலகொளித் துகிர்க்கு டஞ்சா ரிந்திர நீலப் போதி
குலவொளித் தரள விட்டங் கோதில்செம் மணிவி டங்கங்
கலவொளி நிலமேன் மூன்று கவினவோர் விமானங் கண்டான். (கச)

தூமணித் தூபி யுச்சித் தொழமணி * நிரைத்தா னந்தத்
தேமணி விமானக் கேற்குந் திறமணி யுறுப்பெ லாமுங்
கோமணி நிரையின் யாத்துக் குலமணி கிரிசை யோடு
மாமணி கண்டன் மேவும் வனமணி பீடங் கண்டான். (கரு)

அத்தகு வேதி கைக்காங் காயபொன் மணிச்சோ பானம்
வைத்தது சூழத் தாகீர் வந்துபோம் வழிய மைத்தாச்
சுத்தநீ ராங்கி யாத்துத் தூநறு மலர்ப ரப்பிச்
சித்திர நிரைக ளெல்லாந் திறத்திற னுகக் கண்டான். (கசு)

---

* மணி -- இடைக்குறை.

பிறங்குகண் ணடியோ வென்னப் பித்திகை யாதி யேனைத்
திறங்குல வணிக ளெல்லாந் திருத்தகா வமைத்துள் ளாலம்
மறங்குசெவ் வியவ சந்த மண்டபப் புறம்பு சூழக்
கறங்குசீ ரிளம ரக்காக் கமழ்ந்துல களப்பக் கண்டான். (கள)

திருத்தகு மபிமு கச்சீர்த் தெருத்துவா யிலினே ரெம்மா
னுருத்தக வெழுந்து பத்தி யுலாநடைக் காவ ணந்தான்
குருத்தகு விதான மாதி குலமணித் தொங்க லாதி
மருத்தகு மாலை யாதி மலிந்தொளி வயங்கக் கண்டான். (கஅ)

மரகதத் திலக தண்டு மணிபொனூற் குலையி மைத்து
விரவுபூந் துகிரிற் றாக்கும் விழுரிய வாழை வெண்பொ
னைதுவர்ப் பழுக்காய் முத்தி னலர்முகை யாதிப் பூக
நிரைகள்பல் வகைய கன்ன னிலைநிலை யாகக் கண்டான். (க௯)

நிலனெலாம் பளிங்கிற் சோதி நிலவெழ சமன்செய தன்ன
தலனெலா மதித ழூஉம்பர் றாரகா கணங்க ளென்ன
நலனெலா நிறைந்த தூய நகுமணி நிரைக ளாய
குலனெலாம் விளக்க மாகிக் கொழுஞ்சுடர் பரப்பக் கண்டான். (உ0)

விரையெலாம் விராய சாந்த மெழுக்கெலா முகனுஞ் செய்தான்
விரையெலாம் விராய பன்னீர் மேலெலா மணப்பப் பெய்தான்
விரையெலாம் விராய தூபம் விசும்பெலாங் கமழச் செய்தான்
விரையெலாம் விராய சுண்ண விதமெலாம் விரியப் பெய்தான். (உக)

இடமிடந் தோறுஞ் செம்பொ னெழின்மணி குயின்று தூய
வடிபுன னிறைத்துச் செந்நீ யாவில மணிப்பொற் றேங்காய
முடிதரு தருப்பை வாச மொய்ம்மலா மாலை சேர்த்தி
நெடிதொளிர் பூரகும்ப நிரைநிரை யாக வைத்தான். (உஉ)

இன்னன மேலு மேலு மெண்ணில வெண்ணி யெண்ணி
மன்னிய புரிசை சந்த மண்டப முதற்கோ டித்தாங்
கென்னையாண் மந்தி ரேச னிமாசலை யாவ மீன்ற
வன்னைவாழ் நிகேத னங்கட் களவிலா வணிகள் செய்தான். (உங)

தினமரு தமர்ந்து போற்றுந் திருத்தொண்ட னிலையர் தாமு
மினமரு தியாமுன் றெண்டாற் றிருந்தளி யிதுவன் றென்று
மனமரு தையுற் றெந்தை வடிவினுற் றெளிவ பென்று
லனமரு விழைவி னுற்று மணிநிலை யளக்கற் பாற்றே. (உச)

உலகெலாந் தழைக்க வெம்மா னுலாவரத் தவஞ்செய் வீதி
நிலனெலாந் தருப்ப ணத்தி னிழலெழத் தூய்மை செய்தத்
தலனெலாம் வெண்ம ணற்றாந் தன்மையிற் றாள நுண்மைக்,
குலனெலாம் பரப்பி வேணிக் குடினைஞயென் றுவப்பச்செய்தான். (உரு)

அம்மறு இருபாற் கன்ன லரம்பைபூ கதவொ ழுக்க
மம்மறு கனைய கங்கை யாற்றிரு கரைநி லாவுஞ்
செம்மலர்க் கதலி யாதிச் செறிவென நிறுவி மீது
செம்மணித் தொடைய லாதி திகழ்மக ரிகைகள் சேர்த்தான். (உசு)

இவ்வகை யேனை யாவு மெழில்வகை நிரம்ப முற்றி
யவ்வகை மயன்முற் சென்றாங் கனிலனுக் குணர்த்த வன்றே
னுய்வகை முன்ன வேய வும்பர்கோற் குணர்த்த வெல்லைச்
செய்வகை யமரர் சூழத் தேவர்கோ னங்குப் போந்தான். (உஎ)

ஆரரு ளீர்ப்ப முன்னின் றன்புபின் றள்ள வுள்ளம்
பேரரு ளுலகெ லாஞ்செய் பெரியநா யகிபான் மேய,
சீரரு ளமுத நாதன் சேவடி தாழ்ந்து பல்கா
னோரருள் வெள்ள மூழ்கி நின்றுபஃ றுதிந வின்றான். (உஅ)

காளகந் தரம கேச கனககந் *தரமா னேச
†காளகந் தரர்க்கு மோச கவினகந் தரமா னுச
‡காள¶கந் தரசு தேச கனந்தகந் தரச பேச
||காளகந் தரச சூத கானகந் தரசி வாச. (உகூ)

வந்தனை கரண மூன்று மாறுமு வழிசெய் வார்க்கு
வந்தனை யினுமி ரக்க மலியமுன் பொலிய வாங்கு
வந்தனைத் தின்பமுற்றும் வழங்கமு தேச வானி
வந்தனைத் துலகும் போற்று மாவனத் தரசே போற்றி. (ஙo)

*நாகவ ரசன வாத நகுமணிச் சுடிகை யுச்சி
நாகவ ரசன பூசை நயந்தவ தருமே காச
நாகவ ரசன காதி நற்றவ குரவ வர்சை
நாகவ ரசனம் போற்று நறியமா வனத்தாய்போற்றி. (ஙக)

---

* தரம் - மலை. † காளகம் - கரியபாவம். ‡ காளம் - மேகம். ¶ கம் - சிரசு. || காளம் - சூலம்.

* நா - கலர் எனப்பிரிக்க.

தருமமால் விடையாய் போற்றி சைலயோர் புடையாய் போற்றி
யிருண்மனத் தடையாய் போற்றி யிதழியந் தொடையாய் போற்றி
சருமமுந் றிடையாய் போற்றி சதுர்மறை நடையாய் போற்றி
வருமயிற் படையாய்போற்றி மாவன முடையாய் போற்றி. (௩௨)

அரிவளர் மனத்தாய் போற்றி யடையலர்ச் சினத்தாய் போற்றி
களிவள ரினத்தாய் போற்றி காளபோ சனத்தாய் போற்றி
துளிவளர் கனத்தாய் போற்றி தூயசோ பனத்தாய் போற்றி
நளிவளர் தனத்தாய் போற்றி நவிலுமா வனத்தாய் போற்றி. (௩௩)

வேறு.

என்றிவ் வாதி துதிக ளியம்பிநேர்
நின்று செங்கர நீண்முடி மேலெழீஇச்
சென்று கூம்புறச் சிந்தை மலர்ந்துதா
னொன்று மன்பி னுவந்திது வேண்டுமால். (௩௪)

ஐய வாரமு தேச வசலையான்
மெய்ய மந்திர நாத விதுநதிச்
செய்ய வேணிய சின்னஞ் சிறியனே
னுய்ய வேண்டிநின் சந்நிதி யுற்றனன். (௩௫)

உற்று ளேனின் சைத்திர வுற்சவ
முற்று நான்முறை தொட்டு முடித்திட
ரெற்றி வாழ்விருப் பெய்தின னேழையேன்
*பெற்று கந்தநின் போருள் வேண்டுமால். (௩௬)

நலம தொன்றுறற் கெண்ணி னடுவிடர்
பலபு குந்திடும் பண்பினர்க் கும்மெனி
னலம தொன்றுமி ளுயினேற் கன்னவை
பலமுற் றெய்தல் பகர்தலும் வேண்டுமோ. (௩௭)

செய்த லோத வியாதுந் தெரிதராப்
பைதல் வாழ்க்கையுட் பட்டுழ லேழைபா
லுய்த லில்லப ராதமொ ராயிர
மைத லெய்துற நண்ணினு மண்ணலே. (௩௮)

திருவு ளம்பொறுத் தாள்கெனத் தேவர்கோன்
மருவு ளம்புயத் தாளின் வணங்கிமேல்
வெருவு ளந்தெறு நந்திமுன் வேண்டுபு
தருவு ளம்புரி யாணை தலைக்கொளா. (௩௯)

* பெற்று - கடைக்குறை.

தன்ன தேவர் குழாத்தினைத் தானழைஇத்
தன்ன மும்மனம் வேறொன்றிற் சார்ந்திடா
தின்ன வுற்சவத் தின்புற நீர்விழைந்
தின்ன ரின்ன வியற்றுகென் றேவினான். (௪௦)

ஆசை யாசையிற் போற்று மமரரை
நேச மிக்க நிமல நமரங்கா
ளேசி லாத விழாவிங் கியற்றுதல்
பேசி னுந்துணைப் பேறுகொண் டேயென. (௪௧)

முகம னேந்தி யவருண் முதிர்நிதித்
தகவற் கோதுவன் றக்கிணை யாதிய
தொகுபொன் னொடொறுங் காலந் தொறுந்தொறு
மிகவ ளிக்கும் வினைநினக் கென்றனன். (௪௨)

எழு நாக்கொ ளெரியினை நோக்குபு
வாழி வேண்டிடந் தோறும் வகைப்பல
கேழின் மிக்க சுவையிற் கெழுமுணு
வூழி னுக்குந் தொழிலுனக் கென்றனன். (௪௩)

அனில கேட்டி யனகன் சினகரம்
புனித வீதிக ளாதிய பூவெலா
மினிய கண்ணடி யென்ன விளக்குமவ்
வினைப ரிக்குதி யென்று விளம்பினான். (௪௪)

வருண வாதனச் சோதனி மாண்பணி
புரியி டந்தொறும் பூம்புன றூம்பணி
மருவ முக்கின் மெழுக்கு மலர்பணி
யுரிய வுன்றனக் கென்றன னும்பர்கோன். (௪௫)

நிருதி யீண்டு நிருத ரசுரர்கள்
பெரிய பூதர்முற் பேத வகையினோர்
புரியுந் தீவினை யாண்டும் புகாதுநின்
றரிதி னோம்பனிற் காவென் றறைந்தனன். (௪௬)

நடுவ கேள்வரு நாற்புறத் தோர்களு
மிடையொ ருக்கை நடுவின் விலக்கிநின்
றிடரு றுநெறி செல்ல வியக்குகோ
லுடைய கைத்தொழி னிற்கென் றுரைத்தனன். (௪௭)

கோதி லுற்சவங் கொண்டருண் மண்டபத்
தாதி வீதி யெழுச்சியி லஞ்மிகின்
ருேது கோற்ெருழி லாற்று முரிமைமிற்
கேத கும்பணி யீசகொள் கென்றனன். (சஅ)

எற்ற வேற்ற பணிக ளியம்புபு
சாற்று சோதிடர் யார்க்குந் தனிக்குரு
போற்று தன்குரு வாம்பொன் னவன்மலர்க்
காற்று ணைக்க ணமைந்து கழுறுவான். (சகூ)

ஐய மந்திர நாத னருள்விழாச்
செய்ய லாந்தின மோரை சிறப்புற
வுய்ய வோர்ந்துரைத் தாள்கென வோர்ந்தவம்
மெய்ய ஞளையென் ருேதினன் மேதக. (ருo)

நாளை யென்று தொடங்க நலந்தரு
நாளை யோதிய நற்றவர்ப் போற்றியந்
நாளை யேதன் னவையொழித் தின்பரு
* ஞளை யென்று நயந்தன ஞகர்கோன். (ருக)

வேறு.

தந்திர நாதன் வேத தத்துவப் பொருளாய் நின்ற
மந்திர நாதன் செய்ய மகோற்சவத் திருநா ளிந்நாள்
வந்திர வகற்று காட்சி மனம்விழி குளிர்ப்பக் காண்கென்
றிந்திரன் முடங்க நீட்டி யெங்கணு மினிதுய்த் தாஞல். (ருஉ)

உய்த்திடு முடங்கல் கண்டா ராய்யென மண்ணேர் விண்ணேர்
பத்தியி னிறைஞ்சி யேற்றுப் பனிமலர் தூய்ப்பூ சித்தா
ரித்திசை யன்ருே சீர்த்த தெத்திசை களினு மென்ரு
வத்திகழ் சூத கான மடுத்துநாற் றிசையுஞ் சூழ்ந்தார். (ருங)

புல்லொடுஞ் சமிதை யோடு நூலொடும் போது வாரு
மில்லொடும் வேள்வித் தீக்கை யியைபொடு மேகு வாருஞ்
செல்லொடு தோய்கா னின்று தவத்தொடுஞ் செல்லுவாருங்
கல்லொடு தோய்ந்த வாசக் கதிரொடுங் கமனிப் பாரும். (ருச)

சமையம்வாய்ப் புறப்பெற் றெம்மான் றகும்பணி செய்கிற் பாரு
மமைவிசே டாதி வாய்ப்புற் றகம்புறத் தருச்சிப் பாருங்
கமைநடச் சிலம்பி ஞேசை கண்டுகேட் டுருக்கொள் வாருந்
தமையுணர்ந் தமைந்து சார்ந்து தாமிரண் டறவாழ் வாரும். (ருரு)

* ஐ-சாரியை

எற்புடை வேட்டன், முன்மூ விருதொழி லியற்று வாரு
நாற்படை சூழ வாழு நாணிலைப் புயத்தி னாரு
மேற்படை துலாக்கோ லாக மிளிர்ந்தி வினைவி னாருஞ்
சாற்படைத் தொழின்மீக் கூர்ந்து சகமுழு துய்விப் பாரும். (௫௬)

களிறொடு பிடிக ளென்னக் களியொடு நடவு வாரு
மிளிர்முகி லோடு நீங்கா மின்னென விரவு வாருங்
கிளியொடு மின்சொ லாடிக் கிளர்வொடு மேகு வாரு
மளியொடு புயத்த லங்க லலங்கநே ரண்மு வாரும். (௫௭)

ஆமிவ ராதி யானோ ரனைவரு மாங்காங் கன்பான்
மாமகிழ் பூப்ப வன்னோர் மரபுறு நிலையுட் கொள்கை
தாமுணர்ந் தவர வர்க்காந் தாத்தினெட் டிணையுங் குன்று
தேமுற வசித்தற் கொத்த வசதியி னிருப்பச் செய்தான். (௫௮)

இன்னன வேலை யாவை யெழில்விழா விற்கு வேண்டு
மன்னன வங்ங னாக வமைத்தன னாக வானோர்
மன்னனச் சிறப்பு நோக்கி வான்வரு பானு தானுந்
துன்னன விழவு காண்பான் றோயமே னரலை புக்கான். (௫௯)

புள்ளின நாளை யென்னப் புராரிதன் றிருவி ழாவைத்
* தெள்ளின நமரங் காணுந் தெரிசன யத்த மாக
† வள்ளினம் வருதல் வேண்டும் வம்மினங் குடம்பைக் கென்று
நள்ளின வழைத்தல் போன்று நரன்றன செல்வ வானில். (௬௦)

உலகெலாம் பொதுவிற் கொள்வா னுள்ளமு கிறைக்கா நின்ற
நிலையுகண் டோர்புள் ளோகை நிமிரமற் றோர்புள் ளந்தோ
நலிவுற லகில லோக நாயகன் கருணை யொன்றே
பொலிவுறு மின்ப துன்பம் வினைவழிப் புகட்டல் காட்டும். (௬௧)

ஆயதோர் காலை மாலை யவிர்மதி யமரர் கோமான்
மேயதோர் பணியு நம்பால் விதித்தில னாத லாலத்
தூயதோர் விழாவி னுஞ்செய் தூப்பணி நிகரின் றென்மார்
சேயதோர் பணிசெய் கென்னாத் தெளிகடற் குளித்தெழுந்தான். (௬௨)

எழுந்திடு மதியோன் செய்த தென்னென வுரைத்து மம்மா
தழுந்தம பணிசெய் வானோர் தாம்வழி வந்த வேனோ
ரழுந்தம ரேசனாதி யனைவர்க்கு மமுத மாரப்
பொழிந்தயர் வொழித்து மேலும் புரிபணிக் காற்றல் செய்தான். (௬௩)

---

* தெள்ளின-முற்றெச்சம். † வள்ளினம்-இதுவுமது.

புனிதன்முன் னூல வாயிற் புரிந்தருள் புண்ணி யாக
வினையுறு சாந்தி போற்றன் விழுத்தகு கிரண சித்தங்
கனியமு தனைய சூத கானன முற்றும் பெய்தாங்
கினியமா புண்ணி யாக மியற்றினன் மதியோ னென்பார். (௬௪)

சார்ந்ததன் வண்ண மாதல் சாற்றுயிர்க் கியல்ப தென்ப
சார்ந்ததன் வண்ண மாமுன் றழலெறி கொடுங்கா றிங்கட்
சார்ந்ததன் வண்ணஞ் செய்த சாற்றரு வுயிர்போற் றானுஞ்
சார்ந்ததன் வண்ணத் தாலோ தகுமிதென் றுவப்பிற் சாற்வார். (௬௫)

வாட்டமிக் களிக்குங் காலம் பிரிவென்ப மகிழ்கூ டின்ப
வூட்டமிக் களிக்குங் காலங் கலப்பென்ப வுண்மை தெய்வ
நாட்டமிக் களிக்கு மெல்லி நலியநற் பணிகள் செய்தோர்
கூட்டமிக் களிக்கு மல்லீ தெனக்கலாய்க் குலவி னூரால். (௬௬)

நாளொன்றை யொருபால் வெப்ப நண்ணவோர் பாதி தட்ப
மாளொன்று வைத்த தூய்வா னுவிகட் கென்ப கண்டாம்
வாளொன்று வெயிலி னெய்த்த வருத்தமுற் றவிர்வெண் டிங்கண்
மீளொன்று விலக்கிற் றென்னு விழுர்தக வழுத்து வாரால். (௬எ)

இந்துகண் டுற்ற செய்கை யின்னன வாக விப்பான்
முந்துகண் டிறக்கு டாது மூரிநீர் மூழ்கும் பானு
வந்துகண் டிமைகோன் செல்வ மலிவிழா வின்பு துய்ப்பா
னந்துகண் டிறுகு ணுது நாலைமீ தெழுந்தான் மன்றோ. (௬அ)

வருபிர தீசி வேலை மீதுயுங் கான் மருந்தி ரோசன்
றரிசன முறநி னைத்த தன்மையா நன்மையாமோ
வரியமேல் கடற்கு ளித்தோ னணியகீழ் கடலெ ழுந்து
துரிசறுத் தருளை மப்பர் தோற்றமுந் துணையப் பெற்றான். (௬௯)

ஞாயிறுங் குத்த ராய ணத்தனு யுதீசி செல்வோ
னுயினு மருளாற் கிழை யார்கலி யெழீஇ விழாவி
னேயமிக் கீர்த்த லாலங் நிலையொழிந் தமுத நாதன்
கோயிலூர் நேர தாகக் குறித்துவா னிவந்து வந்தான். (எ0)

வருடங்க டோறு மெந்தை மந்திர நாதன் செய்ய
வருடங்கு சைத்தி ரோற்ச வந்தரி சித்தற் காகு
மருவுந்தன் மையினை யோரார் மாதமுன் றநன்ற தாலே
தெருடந்த விரவி நேரேசெல்வதென் றுரைப்பர் மாதோ. (எக)

நாயக னுளத்திற் கேற்ப நடத்தலே குலத்திற் போந்த
தூயகற் பினர்மாண் பென்னுந் துணிவினைக் காட்டி யாங்குத்
தோயமுற் றெழுந்து கொண்கன் சுடர்முக மலர்ச்சி நோக்கி
மேயமுண் டகங்க டங்கண் மிளிர்முக மலர்ந்த மாதோ. (எ௨)

தாவில்சீர்க் குலமா தர்க்குத் தந்துணை நோவி னேதல்
சாவினிற் சாத லேயாந் தலையளி யென்ப தேற்று
மேவிய விரவி நேரில் விதுமுக வொளிம ழுங்கத்
தூவியங் குமுதப் போதங் கண்முகங் கூம்பிற் றம்மா. (எ௩)

செயலொழி வுறக்க மீண்டு செயல்விழிப் பன்றி வேறு
மயறரு முறக்க மில்லா வானவ ரோடு மேனை
முயல்வினை மாந்தர் யாரு முந்துறப் புரியுந் தத்த
மியல்பணி யுள்ள மூக்க வெழுந்தனை ரியற்று கிற்பார். (எச)

தேவர்கோன் குரவன் சொன்ன சித்திரைத் திங்க ளிந்து
மீவளர் பக்கத் தைந்தின் மிருகசீ ரிடநா டன்னி
லோவறு செயமு கூர்த்த மொன்றரு ளேத யந்தான்
மேவுமப் பொழுதே யன்பு மீக்கிளர்ந் தெழவெ ழுந்தான். (எரு)

நித்திய மாதி மூன்று நிமலனு கமத்தி னுற்ற
லொத்திய றமக்கே நல்க வுறுமதி காமம் வாய்ந்தோர்
சத்திய சிவதீக் காதி சமககார முற்றும் பெற்றோர்
முத்திசெய் பரம னேந்து புகோற்பனர் வழிவந் துற்றோர். (எகா)

வேறு.

ஆயசிவத் தவிசர் குழீஇ யமர்ந்ததிருக் கூட்ட முன்போய்
நேயமிகப் பணிந்தெழுந்து நேர்நின்றவ் வானவர்கோ
னுயகனை யான்மார்த்தம் பரார்த்தமென நவிற்றிருபாற்
றூயசிவார்ச் சனைபுரிந்தே யுலகமெலாந் தொழச்சிறந்தீர். (எஎ)

எந்தையமு தேசனுக்கண் டியற்றுவிழாத் தொடக்கமுத
லந்தம்வரை புரிசெயலு மன்றியுநித் தியமுதலு
வந்தசெயன் முழுவதுநும் மாண்செயலே யெனவோர்ந்து
மிந்தவிழா வியற்றுகென யான்வேண்டன் மிகையன்றே.* (எஅ)

அமரரெலாந் தொழுவானத் தரசேநின் மொழியென்னே
நிமலன்மகோற் சவமிதனை நீவேண்டி நடத்துதலா
லெமதுசெய வியற்றுதொழி லேவுபெருஞ் செயனினதாற்
கமைதருகர்த் துருத்துவநின் கண்ணதென வுவந்தோதி. (எகூ)

---

* என்றுனென்பதவாய் நிலையாற்கொள்க.

அனுமதிபெற் றகமதியா லதைராச வனுஞைபெனும்
வினைவிளக்கி யோதியுணர் வேதியர்தம் மனுஞையும்பெற்
றெனையருளு மமுதேச னிமாசலைபூ சனைசிறப்ப
வினிதுபுரிந் தெதிர்வேண்ட லெனுந்தேவா னுஞைபெற்றார். (அ௦)

அக்கடவுண் மாமறையோ ரனையமகோற் சவமிடையோர்
விக்கினமு முறுதினிது வேண்டியவா முடித்தருள்வான்
மிக்கமறை முதற்பொருளாம் விநாயகனை விதிமுறையாற்
பொக்கமிலாப் பேரன்பாற் பூசித்தா ரருள்பெற்றார். (அக)

பின்னனைய விழாவினுக்காம் பெருநிதியந் தூய்தாக
வன்னதனர்ச் சனைபுண்ணி யாகவா சனமாதி
முன்னருளுற் றினர்வாத்து சாந்திவினை முறைபுரிந்தார்
தன்னிகர்மா மறைபரவுந் தனிவில்வ தருமூலம். (அஉ)

தனிலமுத நாதனிரு தனையரொடு மிடத்தமர்ந்த
வனிதையொடும் பிதாவிருகால் வாங்கியவோர் காலினொடும்
புனிதவயிற் றேவினொடும் புடைநிமிர்பல் வரிசையொடு
மினிதினெழுந் தருளிவீற் றிருந்தருளப் புரிந்ததற்பின். (அங)

விதிமுறையிற் பூசனையவ் விருக்கமூ லத்தியற்றித்
துதிசெய்மிருத் திகையதன்பாற் றெட்டெடுத்துப் பட்டடுத்த
கதிர்மணிசூழ் பொற்கலத்திற் கைக்கொண்டு பக்கமுறப்
புதியமதி வேணியொடும் பொற்கோயில் புக்காரால். (அச)

இன்னமுறை யேமிருச்சங் கிரகணமாங் கியற்றியபின்
னன்னமிருத் திகைமுக்கூ றாக்கியவை யொவ்வொர்வகைச்
சொன்னமுளைப் பாலிகையிற் றாயேற்றின் றுவசமொடு
மன்னுவிழாத் தீர்த்தமென்மூ வகைக்குரித்தா முளைதெளித்தார். (அரு)

இவ்வகைசெய் தங்குரார்ப் பணமிரட்சா பந்தனமீற்
றெவ்வமறப் புரிந்துவிடை யெழுதுபடம் பூசித்துத்
தவ்விறுவ சாதிவா சனம்பேரி தாடனமுற்
கைவருபல் வினைகளுமக் கரிசறுமெல் லியின்முடித்தார். (அசு)

எண்டிசைகா வலர்களுமாங் கிருந்தொண்டு புரிந்துறினும்
பண்டிசைநூல் வழாதுதிசா பந்தனமம் முறைபயிற்றி
வண்டருமக் கிராமதே வார்ச்சனமு மாபியற்றித்
தொண்டர்மகிழ் தரவிமயத் தோகையொடு மமுதேசன். (அஎ)

தனக்கினிய விசேடபூ சனையாற்றி மகிழ்ந்தேத்தி
மனக்கினிய வருடருசோ மாக்கந்தர் தமைத்தொண்ட
ரினக்கினிய மண்டபத்தி னெழுந்தருள்வித் தெதிர்மரபின்
வனக்கினிய மால்விடைமுன் வரைந்தபடந் துசத்துயர்த்தார். (அஅ)

ஓதுமுறை மாதுவசா ரோகணமீ தூருற்றியுடன்
மேதகவெண் கொடிகளினுங் கிடையுயர்த்தாங் குடன்யாக
வேதிதிகழ் சாலைபுகூஉ மேவுபரி வாரமுடன்
மேதகுயா கேசகடம் விதிமுறைபூ சனையாற்றி. (அகூ)

கோதான விலக்கிநவ குண்டமுற முறையங்கி
யாதான முதலான வாற்றியா குதிகளெலா
மீதானம் புரிந்தீண்டிவ் விதத்தங்கி வினைநிகழ
மாதான மமர்ந்தருள்சோ மாக்கந்தர் திருமுனுறீஇ. (கூ0)

அளிபெருக னனிசிறப்பி னமர்தருபூ சனையாற்றிக்
களிபெருக வாந்தோளி கவினவிரண் டணிந்தவற்றி
னொளிபெருக வெம்பெருமா னென்றினுமை யொன்றிவர்ந்து
தளிபெருக வமைபோந்து தகவின்மகச் சாலைதனில். (கூக)

எழுந்தருளி வந்தனைய விருஞ்சாலை யபிமுகமாய்த்
தழுந்தகைய பச்சிமநேர் தான்பூர்வ முகத்தருளே
பொழிந்தருளி நின்றருளப் புரிந்துமகம் பூர்த்தியுற
மொழிந்தமுறை பூரணா குதியினிது முடித்ததன்மேல். (கூஉ)

அன்னமகச் சாலைநடு வமர்ந்துயர்ந்த வேதிகையின்
மன்னமுத நாதனிடம் வளர்பெரிய நாயகிதஞ்
சொன்னகடத் திரும்பூசை தொடரவிரு பாங்கரினு
நன்னர்மகா தீபாதி நலம்பெருகு முறைபுரிந்தார். (கூங)

சான்றசிவத் துவிசரிவர் தம்பகும்ப விம்பமெனு
மூன்றினுமிம் முறைபூசை முடித்திடவத் திருக்காட்சி
யேன்றுலகுக் களித்தவணின் றெழுந்தருளி யெம்பெருமா
னன்றதிரு வீதியிலெம் மன்னையொடு முலாத்தருவான். (கூச)

பானுமதி யெனுமிருவர் பல்லுருக்கொண் டெம்பெருமாற்
கானபணி புரிந்துய்வா னடுத்திருபால் வரலேய்ப்ப
மேனிமிர்வுற் றவிர்செம்மை வெண்மையன விரிகவிகைக்
கானநிரை நிரையாகக் கவிந்துநிழ னனிபரப்ப, (கூரு)

ஒருபாறன் பாலாக வுமைகவர்ந்தா டவம்புரிந்தா
ளிருபாலும் பெறப்பணியீண் டியற்றுவலென் றடுத்தனள்பல்
லுருவாகிக் கங்கைதன தொண்டினைவீ சுறுசெயல்போற்
றூவான மகளிர்பலர் சாமரைகள் புடையிரட்ட. (கூசு)

பின்புதமை மடிக்கிடத்திப் பெருந்தாயைச் சிறுகால்செய
இன்புதவு மம்மையப்பர்க் கீண்டிதுசெய் திடன்முறையென்
றன்புதரு தொண்டாபல வருஞ்செயல்வீ சனகொண்டு
முன்புதனித் தனிவிசிறு முழுமணக்கான் முகமடுப்ப. (கூஎ)

தொடர்பிருபா லாலவட்டஞ் சுருட்டிகிரை யாதிசெல
மிடையுநெருக் கொதுக்குமுடி விடையொளிர்பொற் சோதுலவ
விடியகல்வான் பறந்தோடு மியலிருபுள் ளிவைமுதல
கொடிகடமக் கோராசாயக குலவுவிடைக் கொடிமுனுற. (கூஅ)

யாமிதுகா றந்தோநய் மிருநடனத் திறனோரா
ஆமர்முன நடித்தலுந்தோ மோதுநட விகற்பமெலா
மேமுறவோர்த் திடுமெம்மா னிதுவன்றே பெருமபேறென
றுமகல்வா னரமகளி ராங்ஙனெதிர் நடித்துவர. (கூகூ)

நாதமெலா மொடுங்குழிமுன் னண்ணியவா பின்புபல
பேதமுற விறைவன்முனம் பெருகவிரிந் தெழுவவென
வேதவொலி தமிழ்வேத மிக்கவொலி தொக்கபல
கீதவொலி பல்லியத்தின் கிளரொலிகள் வளர்ந்துவர. (கoo)

இருபாலு மெசுர்வேத மெடுத்தோது மிசைபெருக
மருவாகின் றேனையமா மறையொலிபின் மல்கிவரத்
தருவாய்மைத் தமிழ்வேதஞ் சநந்தியின் மன்னிவர
வொருவாத சிவநாம கீர்த்தனத திரேசையெழ. (கoக)

வீணைமுதற் றந்திரிகண் மேயபல கருவியிசை
காணமர்வேய்ங் குழலாதி துளைவகைய கருவியிசை
யேணமர்தோற் கருவியிசை யியைதருதா ளத்தினிசை
கோணறிதாய மிடற்றெழுந்து குலவுமிசைக் குலம்பெருக. (கoஉ)

வந்தியர்மா கதர்சூதர் மலிதருமங் கலம்வீரம்
பந்தியமா புகழ்முறையே பண்புறகின் றெதிர்பாட
முந்தியசீர்ப் பாவாணர் முதிர்சுவைநாற் கவிசூட
விந்தியநீத் தவர்போற்று மிருந்துதிபற் பலகூட. (கoங)

குருக்கொண்ட மதிமௌலிக் குழகனருட் டுவெள்ள
முருக்கொண்டநிறம்பொலிந்தெவ் வுயிர்களுமளித் துறல்போலத்
திருத்தொண்டர் திருமேனித் திருவெண்ணீற் றொளிபரவக்
கருத்தொன்று மரவோசை கண்மலர்நீர் ததிரைவிரவ. (௧௦௪)

திருவருளி னடைந்திமலர் சிந்தைதெளிந் தன்புருகுந
தாரிந்தெய்ய யடியர்சிவ தசபுரா ணத்தனைவின்
வருமரிய பெருமகிமை வகைநனியு வகைசிறப்பப்
பரவியின புநாகளிப்பப் பரிவினெடுத தோதிவர (௧௦௫)

விண்மாரி யெனப்பொழியும் விழிமாரி யனபர்தருந
கண்மாரி சொரிவிரைப்பூங கவினமாரி சிவஞான
வண்மாரி கருதமிழ்மா மறைமாரி யுடன்பதினெண்
பண்மாரி முதலாய பலமாரி நலம்பெருக. (௧௦௬)

எமதுரியு மேகாச மெனவகித்துச சிறப்பளித்தோ
னைமையருளு மெனவடுத்தாங கிபமனிந்து முன்போதக்,
கமைசருமா மறைபரியாக காதலித்தா னுதலினு
னமையருள்வா னெனப்பரிக ணடம்புரிந்தங குடன்போத. (௧௦௭)

சிவனெனுநா மந்தனக்கே யுரியனென மறைதெளித்த
திவியதமிழ்ச சுருதிபுகல் செழும்பொருணோர் தேற்றுதல்போற்
சுவணகட முதறறேவ மஙகலமொந் தொகையெட்டு
மவிரிழைவான மடவாாக ளணித்தாக வெடுத்தேக. (௧௦௮)

என்னனவோ துதுமெல்லா முடையபிரான் றிருவெழுசசிக்
கின்னனமற் றென்னவுமாங கெயதமலர் மணிமறுகின்
முனனவனமா தேவனிறை முக்கணன்வந தானென்று
சின்னமெலா மெடுத்தோதத் திருவுலாப் புறம்போநதான். (௧௦௯)

திருக்கோயின முன்போநது தேவமினு ரெடுத்தேந்துங
கிருப்பூரச சுடாமுதல கவினுறமும் முறைசூழத
தருககாதி சைவர்செய்பூ சனையேற்றுட் சென்றருளி
விருப்பூரு மணியணைமேல் வீற்றிருந்தா னமுதேசன். (௧௧௦)

இம்முறைநா ளேறேற விருஞ்சிறப்பு நனியேற
வம்மவிரு பொழுதுமெழுந தருள்பவனி யெவரிசைப்பார்
நம்மையரு ளனைபெரிய நாயகியோ டமுதேசன்
மும்மையுல குயவுரு முறையூர்தி வகைமொழிவாம். (௧௧௧)

வேறு.

பின்னர் வழிநாட் காலையிலெம் பிராட்டி யோடு மாந்தோளி
தன்னி லிறைவ னுலாக்காட்சி தந்தந் நாளின் மாலையினிற்
பன்னவரிய நித்திலப்பூம் பந்தர் நிழற்கீ ழருடேசன்
மன்னு காழி மணியெழுச்சி மாண்பு நினைப்பித் துலாப்போந்தான். (ககஉ)

மூன்றா நாளிற் காலையுலா முன்னை முறைபோந் தன்றிரவிற்
றான்றாழ்ந் தல்குற குடைந்தபணி தன்னைச் சுமப்ப வுமைபோதக்
கோன்றா னிவண்சார் பிரிவாற்றாக் குணத்தி னடைந்து தரித்ததெனச்
சான்றோர் பரவு கயிலாயத் தனிவா கனமெய் பிரானூர்ந்தான். (ககந)

வருநான் கெனுநாட் காலையுலா மரபிற் போந்தவ் விரவினடை
தெருளோ திமமூர்ந் துமைபோதத் திகழ்சே வடிமுன் முடிசூட்டும்
பெருவாழ் வினுமீ ததிகமெனப் பேணு நதி மிசையவற்குப்
பொருவா முன்னூற் சிவஞான போத மளித்தோ னுலாப்போந்தான். (ககச)

ஐந்தென் றிடுநாட் காலையுலா வடைவிற் போந்து நிசிகரத்து
நந்தின் சொல்லா ரமுதருத்து கருணைக் கிறுகைம் மாறெனவே போன்
முந்துங் கிளியூர் தரவுமையெம் முதல்வன் கணேச னெனற்கிசைய
வுந்தும் பூதந் தனைவசந்த விழாக்கொண் டூர்ந்தா னும்பர்பிரான். (ககரு)

இருமூன் றெனுநாட் காலையுலா வெழிலார் தரப்போந் தநிசியெம
பெருமான் றனையூ டலின்வெல லும்பெற்றி புறத்துந் தெரிப்பதென
வரியூர்ந் துமைபோ தரவெம்மா னயிரா வணமூர்ந் ததுகயிலைக்
கிரியூர் பட்ட வாத்தனமாங் கிழமை தெரிந்தாங் குலாப்போந்தான். (ககசு)

அறமே வேழா நாட்காலை யருமை யுலாப்போந் தனறிரவி
லறமே யுருவா யென்றும்வள ரறமே புரிவா ளதுதெரித்தாங்
கறமே யுருவாம் விடையூர வண்ண லுருவிற் கலந்திடர்மாற்
றறமே வியதோர் தொடர்புணர்த்தாங் கருமால் விடையூர்ந் தருள்புரிந்தான்.

இருநான் கெனுநாட் காலையுலா விணங்கப் போந்தெவ் வுயிர்க்கு முண்
ணொருவா தூட்டி வளர்க்குமுயிர்த் தாய்தானென்ப துணர்த்தாங்குத்
திருவார் காம தேனுவுமை செலுத்த மால்பின் னவதாரத்
துருவா யருள்வேட் டிவண்மேற்கொண் டேற்றா னெனப்பாய் மாவூர்ந்தான்.

ஒன்பா னாளி னுமையொருசோட் டும்பன மயிற்சேய் சண்முக
னென்பா ரொவ்வோர் மாமணித்தே ரிவர்ந்து திருமா மணிமறுகி
லன்பா லுடன்போ தரவெம்மா னமுத நாத னணிமணித்தே
ரின்பா லூர்ந்தாங் கருட்கோலத் தெழிலார் காட்சி யினிதளித்தான். (கககூ)

ஒருபா ஞளிற் சிறுகாலை யுடையா னுடையா ளுடன்காட்சி
தருவாழ் வருளி யுவந்துதனித் தனிவெள் விடைமே னிருமலமாந்
தெருண்மா தீர்த்தந் தனிற்போந்து தீர்த்தங் கொடுத்தாங் குலகமெலாம்
பெருவாழ்வளித்தாங்கருள்வெள்ளப்பெருநீர்தோய்ந்தின்புறப் புரிந்தான். ()

பின்னர் யாக விசர்ச்சனநூல் பிறங்க வாற்றி யாகேச
சொன்ன கடநீ ரமுதேச சுயம்பு மூர்த்திக் கபிடேக
நன்ன ரியற்றி விசேடார்ச்ச னைமுன புரிந்தவ் வமுதேசன்
முன்னா விடைமான் கொடியிறக்கி முதமீக் கூர்ந்தார் சிவத்துவிசர். (கஉக)

ஏற்றிற் புரிசண டேசவிழா விலங்கப் புரிந்தா ரெண்டிசையும்
போற்றுபால ரங்கு ரங்கள் புனைந்த விரட்சை விசர்ச்சனங்க
ளாற்றிற் புரிந்தா ரமுதேச னன்னை பெரிய நாயகிதன்
சாற்று கலியா ணோற்சவமுந் தயங்க மரபின் முறைபுரிந்தார். (கஉஉ)

வருநா டோறுந் தனிவசந்த மணிமண் டபத்தில் வீற்றிருந்து
திருவா விழாக்கொண் டருளியவச் சிறப்பி னனந்த மடங்கின்றாட்
பெருகா திற்பப் புதுநீர்சூழ் பிறங்க யாத்து நறுமலர்பெய்
தொருவா நாப்பண மணிபீடத் துமையோ டுமையா ளமுதேசன். (கஉங)

தனக்கு நபன கும்பாதி தாபித் தருச்சித் துறுமரபின்
மனக்கொண் டினிய வபிடேக வகைகள் பெருக நனிபுரிந்தோ
தனக்கு வால்வாக காதிகளே தனமா பூசைச் சிறப்பியற்றி
மனக்கு மகிழ்கூர் விடாயாற்று மாண்பின் விழாச்சீர் வயக்கினார். (கஉச)

உடனங் கெழுந்தட் சூழன்முத லோரைந் தாவ ரணங்களினும
புடைமா மறைதே வாரசிவ புராண நிருத்த வாத்தியங்க
ளிடனீ ளோதை யோரொன்ற யிலங்கி முறையே தொடர்ந்துவர
நடரா யகன்சூழ் போந்திருக்கை நணிவீற் றிருக்கு நலம்புரிந்தார். (கஉரு)

சாற்று மிவ்வா றமுதேசன் சைத்தி ரோற்ச வஞ்சிறப்ப
வாற்றின் முடித்த சிவத்துவிச ரவிர்வெண் பூதி பிரசாதம
போற்று வலார்க்க களித்தாசி புகன்றிவ் வரிய பெரும்பயனீ
யேற்று வாழ்கென் றுபசரித்தா ரிறைஞ்சியேற்றங் குடல்பொடித்தான்.

பின்ன ரனைய சிவத்துவிசப் பெரியர்க் கரிய வணியாதி
மன்ன வணிந்து மாபூசை வயக்கிச் சிவிகை களி னிவர்ந்தாங்
கன்னர் வீதி வலம்போந்தாங் கமரா சிரியோற் சவமுறையே
நன்ன ரியற்றி யடியுறைக ணயப்ப நனிதந் துளமகிழ்ந்தான். (கஉஎ)

அடைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்துருகு மன்பு பெருக வருள்வெள்ளங்
குடைந்து பணிந்தாங் கமுதேசன் குளிர்தா மரைச்சே வடிநிழற்கீ
ழிடைந்து தனிவீற் றிருக்குமன மீட்க லாற்றான் புறவிடைபெற்
றடைந்து வினைநீங் கியமகவா னும்பரோடு மும்ப ருற்றான். (௧௨௮)

என்னை யுரைத்தாஞ் சூதவனத் தெய்தி யுய்ந்தார் பெருந்தொகையோ
ரன்னை யினும்பே ரருளுடையா னமுத நாத னடைந்தளவே
முன்னை வினைநீத் தருள்வகைகண் முற்று முகம்பற் பலகோடி
தன்னை நிலைசெய் துரைப்பினுமச் சேடன் றனக்குஞ் சாற்றரிதே. ( )

மலர்மெய் யஞ்ஞான சனற்குமர மைந்த வினாம வரிப்பதையென்
னுலகி னுயிராக டிருவருளைப்பெற் றுயமெய்ய நூல்சொல் சாதனமற்ற
பலவென னவையா வருக்குமுறை பயிற்ற லருமையவைகளெல்லா
மிலகு மிறைற்றற கிலதுநிதி சிவபுராண சிரவணமே (௧௩௦)

சிவபு ராண சிரவணமே தெளிநூல் பலசொல் லறங்களெலாஞ்
சிவபு ராண சிரவணமே சோகங்கு செல்வத் திறங்களெலாஞ்
சிவபு ராண சிரவணமே சோகங்கு மனைநன் மக்களெலாஞ்
சிவபு ராண சிரவணமே சோகங்கும் பலவா மின்பமெலாம் (௧௩௧)

சிவபு ராண சிரவணமே சித்தி சுத்தி முத்தியளிப்ப
சிவபு ராண சிரவணமே செறிமும் மலந்தனைத் தெறுவதுவே
சிவபு ராண சிரவணமே சிவ குணநீக் கரிப்பதுவே
சிவபு ராண சிரவணமே திகழுமே பரிணப மருளவதுவே. (௧௩௨)

அன முறையா லவற்றிடைமிக் கருமை திகழிச் சூதவன
மேனீ புராண முழுதேனு மேவு சருக்க மொன்றேனு
மான கவிகள் பலசிலவு மற்றொன் றேனு நியதிபெற
ஞான முறவோர் காதல்கேட்ட னயக்கு மவரே பிறந்தவராம் (௧௩௩)

இன்ன சூத [illegible]னக்காதை யெழுது மவரே டிந்தவர்மேற்
பன்னு முத[illegible]புரிந்தவரச்ரா பரவு மவாபூ சித்திடுவார்
சொன்ன மு[illegible]றையிற் பதிட்டைபுரி தூயர் முதலோ ரமுதேசன்
றன்ன தா[illegible]ளினைத்தலெலாஞ் சார்ந்து வாழ்வார் சாதமிதே. (௧௩௪)

என்றாங் கெல்மியா ணதிமுடித் திசைத்த முறையா லெழுவேட்கை
குன்றா தெளிதுந் திருவிரையாக் கலியைக் கடந்து மேற்கூற
வன்று காதெண் றமைந்திருந்தா னென்கு முகன்சே யெனச்சூத
னன்று தரித்த முனிகுலத்துக் கறைந்தா னைணக் கமைந்தாரால்.

வேதம் வாழி முகில் வாழி விளைகூழ் வாழி யுயிர்க்கின்ப
சீதம் வாழி திருத்தொண்டச் செல்வர் வாழி பூதிமுதற்
சாதம் வாழி சித்தாந்த சைவம் வாழி யருளமுத
நாதன் வாழி யணைபெரிய நங்கை வாழி வாழியவே. (௧௩௬)

இந்திரன் றிருவிழாச்சருக்கமு ற்றிற்று.

சூதவனபுராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௧-௩௱௰.

---

உ

சிவமயம்.

# சூதவனபுராணவசனம்.

## பாயிரம்.

சுதந்தசாட்குண்ணிய பரிபூரண பரமபதியாகிய சிவபெருமான், உலகர் யாவரும் வேதார்த்தங்களை ஒன்றொன்றாக ஆராய்ந்து *நேதிசெய்து அவற்றுள்ளே இதுவுமசத்தாம் இதுவேயுண்மையென்றுள்ளபடி தெளிந்து, அத்தெளிவினால் மலவில்லாத பதிப்பொருள் ஒன்றே, அது இலைமறைகாய்போல் வேதத்துள்ளே விளங்குவதாம், அப்பதி பரமபதியேயாம். இதுவே எவ்வாற்றானும் சிவசமயமென்று சேர்ந்துகொள்ளுதல் சிறியோர்க்கு அரிதாதலால், அந்தவேதத்தினுட்பொருளை அவ்வுலகர்யாவரும் எளிதினுணர்ந்துய்ய வெண்ணித் திருவுளப்பெருங்கருணையினாலே வெளியிட்டருளிய புராணங்கள் பதினெட்டாகும்; அவற்றுள்ளே அக்கினிபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, பிரமபுராணம் இரண்டு, விஷ்ணுபுராணம் நான்கு, சிவபுராணம் பத்துமாகும். அச்சிவபுராணங்களுளொன்றாகிய பௌஷ்யோத்தரபுராணத்திலே க்ஷேத்திரகண்டத்திலே ஸ்ரீபிரகநாயகிசமேத ஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி ஆவிர்ப்பூத சாந்நித்தியராய் வீற்றிருந்தருளுகின்ற திருவுசாத்தானமாகிய சூதவனஸ்தல மான்மியம் விளங்குகின்றது.

இதைச், சிவபிரான் உமாதேவியாருக்குபதேசிக்கும்போது, அவர்மடிமீது வீற்றிருந்துகேட்டருளிய ஸ்ரீசுப்பிரமணியப்பெருமான் நந்திகேசுவரர்க்குபதேசித்தருள, அவர் சனற்குமாரருக்கு, அவர் வியாசமுனிவருக்கு, அவர் எனக்குபதேசித்தருளினாரென்று சூதமுனிவர் சொல்லிய இச்சூதவனமான்மியமாகிய வடமொழியைத் தமிழ்நிலத்தாருணர்ந்துய்யும்பொருட்டுத், தமிழ்மொழிபெயர்த்துத் தருகவென்று அச்சூதவனத்தின் கீழ்பால் ஒருகுரோசத்திலுள்ள ஆலங்காட்டிலே, பூவைசியர்குலத்திலே, கொடை நடையாதியுத்தமகுணங்களானிறைந்த † இராமநாதச்செட்டியார் செய்த அருந்தவப்பயனுதித்து,

* நேதி - ந - இதி எனப்பிரிபட்டு, "அல்ல என்று" எனப் பொருள்படும் வடமொழி. எனவே வேதப்பொருள்களை ஆராயுங்காற் பதிலக்கணங்களமையப்பெறாதனவற்றை இது பதிப்பொருளல்லவென்று நீக்கி என்பதாம். பதிலக்கணங்கள் அநாதிபோதாதி அஷ்டமங்கள குணங்களாம்.

† இவரை ராமசாமிச்செட்டியாரென்றும் வழங்குப; நாதனெனினும் சாமியெனினும் பொருளொன்றே.

உத்தமமாகிய சதுர்வருணவிலாச சிவநியமாநுஷ்டான சிவாநுக்கிரக சம்பந்த சிவபூஜாதுரந்தராய்ப்பிரசித்திபெற்று விளங்குகின்ற ஸ்ரீமாந்-சிதம்பரச்செட்டியார் கேட்ப, அதனை மறுக்கமாட்டாமையால், அன்பும் அறிவுஞ் சிறிதுமில்லேனாயினும் மெய்யன்பர்கள் எண்ணியகாரியம் இனிது முடித்தருளுங் கிருபாவள்ளலாகிய சிவபிரான், அம்மெய்யன்பர் பொருட்டு இதனை இனிதுமுடித்தருளுவாரென்று துணிந்து ஸ்ரீ சாம்பசிவகுரவசரணாரவிந்தங்களை வணங்கித் திருவருளைவேண்டி அதனுள் அடங்கிநின்று தமிழ்மொழி பெயர்த்து ஆயிரத்தைஞ்ஞூற்றிருபது திருவிருத்தங்களாகச் செய்தமைத்தேன்.

---

## அவையடக்கம்.

சொற்பொருளெல்லாம் சத்தி சிவரூபமேயென்பது சர்வாங்கீகாரம். ஆதலால், இப்புராணச் சொற்பொருள்களைச் சத்துவகுண விசிஷ்டர்களாகிய சாதுக்கள் சத்தி சிவரூபமாகவேகருதி அவற்றாற்சிவசரித்திரமகிமையைத் தெளிந்து சத்துவப்பயனைப் பெறுவாராகி மற்றையோர் யாதுகாரணத்தாலாயினும் அதை மறந்து குற்றம்நோக்குவாராயின் அதற்குச்சமாதானஞ்சொல்லுதல் பரதந்திர வழிப்பட்ட எமது கடமையன்று. அன்றியும் சமஸ்தவாக்கியங்களும் சிவாஞ்ஞையானெறி நடவா என்று பெரியோர் சொல்லுதலால் இப்புராணச் செய்யுட்கள் யான் செய்ததாக நினைத்துக் குணவான்கள் குற்றஞ்சொல்லார்கள். அப்படியன்றி என்வாக்கெனறெபிறர் கூறினும் அக்கூற்றுடையார்இக்கவிகளிற்குற்றம்பார்க்கின் அது அவர்க்கேபழிப்பாகும். என்னை? நானேயென்றால் இறைவனுற் குற்றங்களெல்லாவற்றையு நிறைத்துவைக்கப்பெற்றஅநேகங்களஞ்சியங்களை ஆகாததுள்ளேன. குற்றமே வடிவாகிய என்னிடத்து முற்றுங் குற்றமேயன்றி வேறு தோன்றாவாகலின்.

---

## புராண வரலாறு.

உலமகலாமபுகழுகின்ற சத்துவகுண விசிஷ்ட புண்ணியபூமியாகிய நைமிசாரணியத்திலே முன்னொருகாலத்திலே, சௌனகர் முதலிய முனிவர்கள் சத்திரயாகஞ்செய்து வந்தார்கள். அப்போது சூதமுனிவர் சுவேச்சையாக அங்குவந்தார் முனிவர் யாவரும்இருக்கைவிட்டெழுந்து, காஞ்சிரமேற்குவிய எதிர்சென்று உபசரித்து அழைத்துவந்து ஆசனத்திருத்திப்பூசித்து நின்று முனிவர் பெருமானே? அடியேங்களுக்கு அநேகமுறை கருணைகூர்ந்து சிவபுராணாமிர்தம் புகட்டினீர்கள். சிறிதுந தெவிட்டிலது; முன்சிவக்ஷேத்திர மகிமைகள் உபதேசித்துவருங்காற் சூதவனமென்றொரு உத்தம சிவஸ்தலம் உள்ளது, அது எத்தலத்திலுஞ்சிறந்தது, அத்தலத்தில் வீற்றிருந

திருளுக சிவபிரான் அம்பாகளுக்கு அருளிய நிவயசாத்திர மகிமைக்ள் அளவில்லாதனவாகுமென்று சொல்லியருளினீர்கள். அம்மகிமாவிளைய கேட்பதில் மிகுந்த ஆசையுடையேம், அநுக்கிரகித்தருளுக என்று வேண்டிக்கொண்டார்கள்.

சூதமுனிவர், மிக்க விருப்போடு ஸ்ரீபிரகந்நாயகி சமேதஸ்ரீமந்திரேசுவரஸ்வாமி பாதபங்கயங்களைச்சிரமேற்கொண்டு தியானித்திருந்துபின் முனிவர்களே? உங்கள் கேள்வி உலகெலாம் உய்தற்கு ஒரு முக்கியகாரணமுமாகும். என்மனமும் அதனையே விரும்பியது. இச்சிவபுராணசிரவணமே யாவர்க்கும் சர்வாபீஷ்டங்களுங்கொடுப்பது. நீங்கள் கேட்ட இச்சூதவன மான்மியம் அபக்குவர்களுக்குச் சொல்லக்கூடாத அதிக ரகசியசரித்திரமாகும். இதனை ஸ்ரீ நந்திதேவர் சனற்குமார முனிவர்க்கு உபதேசித்தருளினரென்று அம்முறையே சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீகைலாசத்திலே, செம்பொற்றிருக்கோயிலிலே, ஸ்ரீகண்ட பரமேஸ்வர சந்நிதானத்திலே, திருவருள்வெள்ளமென்றே யாவருந் துதிக்கின்ற அமுதமே நிறைந்துள்ள சிவதீர்த்த மொன்றுள்ளது. அதன் கரையிலே, ஆயிரக்கால் மண்டப மொன்றுண்டு. சுத்தவித்தியாமயமென்றே யாவராலுந் துதிக்கப்பெறும். அதனிடத்து உத்தமமுனிவர்கூட்டமும் வேதசிவாகமாதி சாஸ்திர முழக்கமும் எப்பொழுதும் நிறைந்து கொண்டேயிருக்கும். அம்மண்டபமத்தியிலே, வியாக்கிராசனத்திலே வீற்றிருந்தருளுகின்ற ஸ்ரீநந்திதேவரைச் சனற்குமாரமுனிவர் வணங்கிப் பூசித்துத் துதித்து அஞ்சலியஸ்தராய் நின்று, எம்பெருமானே? தாங்கள் முன் உபதேசித்தருளியசூதவனமான்மியத்தை இன்னும் விஸ்தாரமாக்கேட்பதில் விருப்பம் மேலிடுகின்றது; திருவருள் புரிகவென்று வேண்டிக்கொள்ளத், திருநந்திதேவர், அத்தலத்தையும் விநாயக சுப்பிரமணிய சாம்பசிவ பாதங்களையும் வணங்கித் துதித்து, நமது அருள்வழிப்புத்திர சிகாமணியாகிய சனற்குமாரனே? அவ்வியாஜகிருபாமூர்த்தியாகியபரமசிவன் உலகெலாம்உய்யும்பொருட்டு அநவரதசாந்நித்தியராய் வீற்றிருந் தருளுகின்ற சூதவனமாகிய உத்தம சிவஸதலமானது, அத்தியந்தநிர்மல ஸ்தானமாய்த் தென்சமுத்திரத்திலுள்ள ராமசேதுவின் ஈசானதிசைவிளங்கவீற்றிருப்பது. இந்த உத்தம சிவஸ்தலமே இப்பூமிக்கு திருவருட் பிணையாய் விளங்குவது. தன்னையடைந்தார்க்கு மகாபாதகாதி சமஸ்தபாவங்களும் நீக்கிச் சர்வாபீஷ்டங்களுங் கொடுத்து மோக்ஷத்தையுங்கைப்பொருளாக்குவது. இத்தலத்தின் பெருமை எத்துணைச் சிறந்தோராலும் எத்துணை கற்பகாலம் இருந்து சொல்லினுமுடியாது. அங்ஙனமாகவும் நீ அதனைக் கேட்பதிற் கொண்ட பேராசையை மறுக்க முடியாமையால் ஒரு சிறிது சொல்லத் துணிந்தோம். இத்தலமான்மியம் பதினைந்து பகுதியாய் உள்

உத்தமோத்துவையாவன, தலம், தீர்த்தம், மூர்த்தி விசேடமென்றும், சூதவன பங்க நிரணச்சருக்கம், ஆதிசேடனுபதேசம்பெற்றசருக்கம், ஆதிசேடன் சிவலிங்கம் பெற்ற சருக்கம், ஆதிசேடன் சூதவனஞ்சென்ற சருக்கம், ஆதிசேடன் திருப்பணிச்சருக்கம், ஆதிசேடன் சிவார்ச்சனைச்சருக்கம், வருணன் சாபமோசனச் சருக்கம், மார்க்கண்டச் சருக்கம், இராமன் மந்திரோபதேசச் சருக்கம், அமுதநிவேதனச்சருக்கம், திருவிழாச்சருக்கமென்றுமாம். இவற்றை வரிசைக்கிரமமாக அறிந்தவாறு விரித்துரைக்கின்றேம்; கேட்பாயாக என்று திருநந்தி தேவர்சொல்லத் தொடங்கினர்.

---

## தலவிசேடம்.

சனற்குமாரனே? மகாமேருகிரியின் தென்றிசையிலே, சம்புத்தீவிலே, பரதகண்டத்திலுள்ள தமிழ் நாடாகிய குலமகட்கு முகமென விளங்குகின்ற சோழ நாட்டிலே, அம்முகத்திற்கண்போல இச்சூதவனம் பிரசித்திபெற்று விளங்கும். அது காவேரிக்குத் தெற்கே மூன்று யோசனை தூரமும் வேதாரணியத்துக்கு மேற்கே இரண்டு யோசனை தூரமும் தென்சமுத்திரத்திற்கு வடக்கே ஐந்துகுரோசதூரமுமாகியஎல்லையிலுள்ளது. அத்தலத்தின் அகலம் மூன்றுகுரோசமாகும். இச்சூதவனம் முற்காலத்தில் ஸ்ரீராமன் இராவணனாகிய பகைவனைவெல்லுதற்குபாயவல்லபம்பெறவேண்டித்தன்னிடம்வந்து ஸ்ரீ மந்திரேஸ்வரஸ்வாமிதிருவருள்பெற்றுஉசாவுதல் செய்தமையாலும், செல்வம் கல்விஞானம் முதலியதிருக்கள்எப்போதும்உசாவிக்கொண்டிருத்தலாலும், திராவிடவேதப் பிரதிபாத்தியமாகிய திருவுசாத்தானமென்னுந் திவ்ய நாமம் பெற்றது. இத்தலத்தை யார் அடைந்து அஷ்ட சித்திகள் அஷ்ட போகங்கள்சித்தசுத்தியாதி பரமுத்திமுதலிய எவற்றைவேண்டினும்வேண்டியபடிபெறுவார்கள். சமஸ்த சிவஸ்தலங்களும் இத்தலமேயாகுமெனத்துணிந்துஎல்லாத்தலங்களிலும்வசித்த எல்லா முனிவரும் இங்கு வந்து திருவருள் பெற்றுஎப்போதும்வசித்தலால்; இது பிருதுவிதத்துவமென்றுசொல்லவும்படும். விருப்பத்தோடு தன்னை அடைந்தவர்களுடைய பாவங்களாகிய மண்மலைகளை முழுதுங்கரைத்துப் பேரின்பமாகியசீதளத்துவத்தைக்கொடுத்தலால் அப்புதத்துவமென்றுசொல்லவும்படும்: எவராலுந்தன்னையடைந்தவர்களுடைய பிறவிக்காட்டைத் தகித்தலாற்றேயுதத்துவமென்று சொல்லவும்படும். தன்னையடைந்தாருடையபாவமலைகளைப்பேர்த்துஎறிதலால்வாயுதத்துவமென்றுசொல்லவும்படும். தன்னையடைந்த அன்பர்களுக்கு ஞானகாசசித்தியானந்தமளித்தலால் ஞானகாசத்தத்துவமென்றுசொல்லவும்படும். இத்தலத்தைக் கண்டவர்கள் மூனனாகப் பிராப்தமாகத்தக்கபாதகங்கள் எவ்வளவு செய்திருந்தாலும் அவ்வளவும் நீங்கப்பெறுவார்கள். இத்தலத்தில் வசி

ந்திருந்து சிவதிருத்தொண்டு செய்பவர்கள் அருவருட்புவனாதிபதிகளாய்த்தேவரெல்லாந்தமக்குத்தொண்டுசெய்யவீற்றிருப்பார்கள். அமிர்தசூதவனமென்னுந்திருநாமத்தை ஒருமுறை ஜெபித்தவர்கள் மிர்தம் நீங்கப்பெறுதலால்அமிர்தராகின்றார்கள். திருவுசாத்தானமென்னும்நாமம் ஜெபித்திறவர்கள் கீர்த்திலெக்ஷ்மி அனாதி அஷ்ட லெக்ஷ்மி சிவஞான லெக்ஷ்மி முதலிய லெக்ஷ்மிகளெல்லாம் உசாவுகின்றதானமாகப் பெறுதலால் அவர்களும் திருவுசாத்தானமாவார்கள். இத்தலத்திற்செய்கின்ற செபதபயாகாதிதர்மங்கள் ஒன்று அநந்தமாகும். அந்நியதலங்களில் அநேககற்பகாலம் பஞ்சேந்திரிய நிக்கிரகத்தோடு செய்யப்படும் பரிசுத்த தவப்பிரயோசனம் இத்தலத்தின் எல்லையை அடைந்தமாத்திரத்திற் கூட்டுவதாகும். இப்படியானால் இத்தலத்தை யடைந்து சிவதீர்த்த ஸ்நானஞ்செய்து சூதவனேசர் சந்நிதிவந்து தரிசித்தல் தியானித்தலாதி செய்கின்றவர்களுக்கு இத்தலம் கொடுக்கின்றபலன் என் சொல்லளவுட்படுமோ. கணிதநூல் வல்லார் நினைந்தெடுத்துக்கூறும் பெருந்தொகையுள அப்பலனின பெருந்தொகைச் *சிகையும் உட்படா. இனிப்பலவாறு விரித்துக் கூறுவதென்னை. இத்தலத்தில் இடையறாது வசித்துப் பெரியநாயகியையும் சூதவனேசரையும் தினமும் வழிபடு நியமமுடையோர் பெறும் பிரயோசனம் †கைம்முதிக ந்யாயத்தால் எண்பெருகித் தெரிந்துகொள்வதும் அசாத்தியமே. இதனை மெய்யன்போடுபடிப்பவர்களும் கேட்பவர்களும் சமஸ்த தீமைகளு நீங்கித் திருவருள்பெற்றுவாழ்வார்கள்.

தலவிசேடமுற்றிற்று.

---

## தீர்த்த விசேடம்.

—(:o:)—

சனற்குமாரமுனிவ! யாத்திரைக்கண்டாதிமுனிவர்களாமே சகல புவனங்களிலுமுள்ள சிவதீர்த்தங்களெல்லாம் இத்தலத்திலுள்ளேவந்து கூபதடாகாதிரூபங்களாய என்றும் வசிக்கின்றன. இவற்றின் நாமவரிசையே அளவில்லையாதலால் அவற்றுட் சில தீர்த்தமாத்திரம் விளக்குகின்றேமென்று திருநந்திதேவர் கூறுகின்றார்.

திருக்கோயிலினுள்ளே, அக்கினிதிசையிலே ஒரு சிவதீர்த்தம் உள்ளது. அது, நிர்மல தீர்த்தமென்றும் மணிகர்ணிகாதீர்த்தமென்றும் பெயர்பெறும்.

---

* எண்தொகை சிகையென்றது ஆயிரத்திருநூற் றைம்பத்துமூன்றில் மூன்று என்னும் இலக்கம் போல் வருவனவற்றை யென்க.

† கைம்முதிகம்—இதற்கு இப்படியானால் இனிச்சொல்வதென்னவென்னுந் தாற்பரியத்தை விளக்குவது.

து நீர வடிவாயினும, தன்னிடத்துவந்து அன்புடன விதிவழிமூழ்குவோ
நடைய பிறவிப் பெருங்காட்டைப் பஞ்சுபோல எளிதிற்றகித்து விடுதலின்
க்கினி யென்று சொல்லத்தகும். யாவர்க்கும் இத்தீர்த்தத்திலே தினமும்
யதியாக ஸ்நானஞ் செய்யக் கிடைப்பதரிது. ஆயினும் வருஷத்துக்கு ஒரு
றை * சித்திராபருவத்திலே இத்தீர்த்தஸ்நானஞ் செய்தால் மூந்நூற்ற
பத்தைந்துநாளிலும் ஸ்நானஞ் செய்த பலன்முழுதுஞ் சித்திக்கும். திருக்
கோயிலுக்குப் புறத்தே கிழ்த்திசையிலே அனுமகுண்டமென்றொரு தீர்த்த
முள்ளது. அதில் அந்த அனுமன் மூழ்கி இஷ்ட சித்திகள் முற்றும்பெற்ற
ன். இதிலே மங்களவார ஸ்திரவாரஸ்நானம் முக்கியம். இத்தினங்களில் மூ
ழ்குவோர் திடகாத்திர தைரிய வீரியாதி இஷ்டகாமியமெல்லாம் பெறுவா
ர். இதன்கீழ்த்திசையில் ஆதிசேட தீர்த்தமென்று ஒன்றுள்ளது. இதிலே
ாசிமகநாளிலே அன்பு மிக விதிப்படி மூழ்குவோர் அஷ்டபோக முதலிய இ
ஷ்ட சித்திகளெல்லாம் பெறுவார்கள். அன்றியும் வேதசிவாகமாதி சகல சா
ஸ்திரபாரங்கதர்களாய் உண்மைஞானத்தாற் சிவசாயுச்சியப் பெருவாழ்வும்
பெறுவார்கள். திருக்கோயிலுக்குப் புறத்தே மேற்றிசையிலே மார்க்கண்டதீ
ர்த்த மென்றொரு தீர்த்தமுள்ளது. இது சர்வபாதகங்களும் நீக்கத்தக்கது. ச
கலபுவனங்களாலுந் துதிக்கத்தக்கது. இதிலே தைமாச குருவார பூச நக்ஷத்தி
ரத்திலே அன்போடு விதிப்படி மூழ்குவோருடையபார்வை செல்லுந்திசை
யிற்செல்லவும் அஞ்சுவான்; சர்வசீவர்களையுங் கவருகின்றயமனு மென்றால்,
அவர் பெறும் பலன் முழுதும் யார்தான்சொல்லவல்லவர்கள். திருக்கோயிற்
புறத்தே தென்றிசையிலே கௌதம தீர்த்த மென்றொரு தீர்த்த முள்ளது.
இது மூழ்குவோர்க்கு இஷ்டசித்திகளெல்லாம் உடனேகொடுப்பது. இன்னு
ம் இவைபோன்றஅநேக சிவ தீர்த்தங்கள்இத்தலத்துள்ளன. இவ்வளவென்
னுந்தொகைதானுஞ்சொல்லமுடியாதாகில் மகிமையெடுத்துச்சொல்ல நினை
ப்பதெப்படி †ஸ்தாலிபுலாக ஞாயத்தாலூகித்துணர்க. இத்தீர்த்தங்களெல்
லாம் மேற்சொல்லிய அவ்வத்தினங்களினன்றி எத்தினங்களின் மூழ்கினும்
எண்ணியஎண்ணிய இஷ்டசித்திகளெல்லாங்கொடுக்கும். இதனை மெய்யன்
போடுபடிப்பவர்கேட்பவர் இகவாழ்வுமுற்றும்பெற்று ஆணவமலவாதனை நீங்
கித் திருவருட்பேரின்ப வாழ்வுபெறுவார்கள்.

தீர்த்தவிசேட முற்றிற்று.

---

* இத்தினத்திலேஇத்தீர்த்தத்திலேஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமிமகாரதோ
ற்சவாந்தமாகிய தீர்த்தோற்சவங் கொண்டருளும் வழக்கம் என்றுமுள்ளது.

† ஸ்தாலிபுலாகம்—ஒருபானைசோற்றுக்கு ஒரு அவிழ்பதம்பார்த்து, எ
ல்லாம் அதுபோலென்றுதெளிவதுபோல விளக்குவதோர்ஞாயம்.

## மூர்த்திவிசேடம்.

சனற்குமாரனே? இனி மூர்த்திமகிமை கேட்பாயாகவென்று திருநந்திதேவர் கூறுகின்றார். நிஷ்களமாகிய பரமசிவன் ஜனனமரணப்பட்டுப்பற்பல சரீரமெடுத்துழல்கின்ற சீவகோடிகள் எளிதிற்றிருவருள்பெற்றுய்கவென்று திருவுளங்கொண்டருளிய பெருங்கருணையினாலே, ஒளிப்பிழம்பாய் அமிர்தமய சுயம்புலிங்க ரூபமாய் இச்சூதவனத்தில் ஓர் மாவிருக்ஷ நீழலிலே தோன்றி, வில்வம் கொன்றை மல்லிகை முல்லை முதலிய மரங்களுங் கொடிகளும் மலர்தூவிச்சூழ்ந்து மிக நெருங்க மத்தியிலேவீற்றிருந்தருளும். இங்குவந்து இச்சுயம்பு மூர்த்தியை ஆதிசேடன் வருணன் மார்க்கண்டன் இராமன் முதல் அநேகர் வழிபட்டுத் தங்கள்தங்கள் இஷ்டசித்திகளெல்லாம் பெற்றார்கள். இந்த அமிர்த சுயம்பு மூர்த்திக்கு மார்க்கண்டேசன், வருணேசன், அநங்கேசன், மந்திரேசன், அமிர்தசூதவனேசன், திருவுசாத்தானேசன், அமுதலிங்கேசன் முதலிய அநேகந்திருநாமங்களுண்டு. முற்றும் விதந்துகூறுதல் எவர்க்கும் அசாத்தியமே. இத்திருநாமங்கள் சப்தகோடி மகாமந்திரங்களினு மேன்மையுள்ளன. இவற்றுள்ளே, மார்க்கண்டேச நாமஞ் செபித்தவர்கள் யமனையும் வெல்லும் பெருவலிபெற்று வாழ்வார்கள். வருணேச நாமஞ்செபித்தோர் சர்வரோகமுநீங்கிச் சுகமுற்றுவாழ்வார்கள். அனங்கேச நாமஞ் செபித்தோர் சகலகலாவல்லவர்களாய் உண்மைஞானம் பெற்றவாழ்வார்கள். மந்திரேசநாமஞ் செபித்தோர் பூதவேதாள பிர்மராக்ஷதாதிகளால் வருங்கஷ்டங்கள் முழுதும் நீங்கப்பெறுவார்கள். சூதவனேச நாமஞ்செபித்தோர் திருவருள் விலாசமாகிய குளிர்நிழலிலிருந்து வாழ்வார்கள். திருவுசாத்தானேச நாமஞ்செபித்தோர் முத்தி முதலான சகலதிருக்களுந் தம்மைச்சேர்ந்திருக்கப் பெறுவார்கள். அமிர்தலிங்கேசநாமஞ் செபித்தோர் மிர்தம் நீங்கி நித்தியானந்த வாழ்வுபெறுவார்கள்.

இத்தலத்திற் சமஷ்டிரூபமாய் விளங்கும் இச்சுயம்புலிங்கமொன்றே, எல்லாத்தலங்களிலும் வேறுவேறு சுயம்புலிங்கங்களான வியஷ்டிரூபங்களாய்விளங்குகின்றது. வழிபடுகின்றமெய்யன்பர்க்கு அமிர்தத்துவத்தைக்கொடுக்குஞ்செயலாலன்றியும் வெண்ணிறத்தாலும் அமிர்தலிங்கமென்பதை விளக்குகின்றது. பலவாக்கூறுவதென், இந்த அமிர்தசுயம்புமூர்த்தியைப்போற்சிறந்த மூர்த்தி எவ்வுலகத்துமில்லையென்று அக்கினியைக்கையிலேந்திச் சத்தியஞ்செய்வோம். இச்சிவபிரானை உதயகாலத்திலே மெய்யன்போடு தரிசிக்கப்பெற்றோர் உண்மைநூல்களிற்கூறுகின்ற சமஸ்ததர்மங்களுந் தம்மிடத்தில்விளங்கப்பெறுவார்கள். உச்சிக்காலத்திலே தரிசிக்கப்பெற்றோர் சமஸ்தநிதிகளும் நிறையப்பெறுவார்கள். சாயங்காலத்திலே தரிசிக்கப்பெற்றோர் சமஸ்த இன்பங்களும்பெறுவார்கள். அர்த்தயாமகாலத்திலே தரிசிக்கப்பெற்றோர் பிறந்

திறவாப்பெருவாழ்வாகியபரமுத்தியைப்பெறுவார்கள். தைப்பூச குருவாரம்பூச நக்ஷத்திரம்பௌர்ணமிகூடியதினத்திலேதரிசிக்கப்பெற்றோர் எவ்வித குரூர பாதகங்களும் நீங்கப்பெற்று அதிபரிசுத்தர்களாய் நினைத்தவெல்லாம்பலிக் கைகூடப்பெற்று லோகப்பிரசித்தியாயவாழ்வார்கள். சைத்திரோற்சவத்திற் பத்துநாளும்நியதியாக அன்போடு தரிசிக்கப்பெற்றோர் பூமிசெல்வம்புத்திரச் செல்வம் பொருட்செல்வமுதலியசெல்வசிறப்பெல்லாம் பெற்றுவாழ்ந்து தேகாந்தத்திலே சிவகதிச்செல்வராயவாழ்ந்திருப்பார்கள். இச்சூதவனத்தைப்போய்வணங்குவோமென் றெண்ணி வழிச்சென்றோரும், அங்கே மெய்யன்போடுதரிசிக்கப்பெற்றோர்பெறும்பயனைப் பெறுவார்கள். இச்சிவலிங்கமூர்த்தியைக் காணப்பெற்றவர்கள் ஜெனன மரணாதி எவ்வகைத்துன்பங்களையுங் காணமாட்டார்கள். பணிந்தவர்கள் சர்வாண்டங்களுந்தம்மைப்பணியவீற்றிருப்பார்கள். நினைத்தவர்கள் இப்பூமியில் இன்னும்பிறக்கச் சற்றுமரிய நினைவுகொள்ளார்கள்.

இம்மாத்திரஞ்செய்யும் இங்கேகொண்டாங்கே இப்பலனெல்லாம் அருளுகின்றாரென்றால், இனி இவ்வமுதலிங்கேசரை அன்புமீதாரத்தினந்தோறுமநியதியாக வழிபடுவோர், திருவலகுப்பணி திருமெழுக்குப்பணி திருநந்தனவனப்பணி திருமாலைப்பணி தூபப்பணி தீபப்பணி முதலியன செய்வோர், சொர்ணமுதலியவற்றாலாகிய குடங்கள் கலசங்கள் தூபக்கால் தீபக்கால் மணி முதலிய பூஜாபாத்திரங்கள் கொடுப்போர், நித்தியபூஜைக்கு வேண்டியசமஸ்தத்திரவியங்களும் சிறிதும் பழுதில்லாமல் நன்காராய்ந்து காலந்தோறுங்கொடுத்துவிதிவழுவாமற்செய்வித்து, அப்படியேநைமித்திகமாகியமகாரதோற்சவாதி திருவிழாக்கள் விதிப்படி சவிஸ்தாரமாக நடத்துவோர், திருக்கோயிலிலேபழுதுநீக்குதல் முதலியதிருப்பணிகள் மணிபொனாதிகளாற்செய்வோர், சொர்ணரத்னாபரணாதிகள் செய்தளிப்போர், உத்தமமானபசுக்கள் வளர்த்து நாடோறும் பால்கொடுப்போர் முதலிய திருத்தொண்டர்க்கருளும்பலனை அளவிட்டுச்சொல்லயாரவல்லவர்கள் அந்நியதலங்களெல்லாவற்றிலுமுள்ள அவ்வவ்விலிங்கசந்நிதிகளிற்செய்யுஞ்சரியைகிரியாதி திருத்தொண்டெல்லாந்தரும் பலன்முழுதும் இவ்வமுதலிங்க தெரிசனம் ஒன்றேகொடுத்துவிடும். இகலோகவாழ்க்கையும் பிரமவிஷ்ணுவாதியர் பரலோகவாழ்க்கையும் உருத்திராதியர் வாலோகவாழ்க்கையும் அமலமோக்ஷவாழ்க்கையும் அமிர்தலிங்கேசர்க்கு நாடோறும் அன்போடுவிதிப்படிசெய்யும் பூசனையேகொடுத்துவிடும். இவ்வமுதலிங்கேசர் இங்கேசெய்தருளுகின்ற திருவருள்விலாசத்தியற்கையில் ஓரணுமாத்திரங்கூட அளவிடமுடியாதானால்முழுதுஞ்சொல்லயாரவல்லவர்கள். அன்பனே நாமுனக்குஇங்கேசொல்லியது அணுமாத்திரையிற்கோடியிலொருபங்கேனுமில்லை, இதனை அன்போடுபடிப்பவர்கேட்பவர் யாவரும்

முன்செய்தவினைமுழுதுமகன்று இம்மையிலேபலபோகங்களும் அனுபவித்து தேகாந்தத்திலே திருவடி நிழலிற்கலந்துவாழ்வார்கள்.

மூர்த்திவிசேடச்சருக்க முற்றிற்று.

---

## சூதவனநாமகாரணச்சருக்கம்

சனற்குமாரனே ? இனி இத்தலம் சூதவனமென்னும் பேர்பெற்ற காரணங் கேட்பாயாக என்று திருநந்திதேவர் கூறுகின்றார். முன்னொருகாலத்திலே காசிபமுனி பத்தினிகளாகிய கத்துரு வினதையென்னுமிருவரும் சற்றேறதாரத்தே இந்திரனுடைய குதிரையைக்கண்டு மூத்தாளாகிய கத்துரு இக்குதிரைவால் வெண்மையா கருமையா வென்று கேட்க, வினதை வெண்மையென்னக்கத்துருகருமையென்றாள். இப்படி இருவரும் மாறுபட்டு நம்முள்ளே தோற்றவள் வென்றவளுக்கு அடிமையாய்விடுவதேசபதமாகும்; இக்குதிரையைஇன்னுமொருமுறைசமீபத்திற்பார்த்துநிச்சயிப்போமென்று பிரதிஞ்ஞைசெய்துகொண்டார்கள். பின்பு கத்துரு, தன்மக்களாகிய அனந்தன் முதலியசர்ப்பர்களைநோக்கி நீங்கள் இந்திரன்குதிரைவாலைக்கருமையாகச்செய்யுங்களென்றாள். அடாதகாரியமென்று அவர்கள்மறுத்ததுகண்டு கோபித்தாள். அவருள்ளேகார்க்கோடன் அவள்கருத்தின்படி அக்குதிரைவால் கருமையாகும்படிதான்இறுகச்சுற்றிக்கொண்டான். பின்புகத்துரு வினதையை அழைத்துக்கொண்டுபோய்க்காட்டினாள். பார்த்து நான்உனக்கு அடிமைதானென்று கூறி அன்றுமுதல் அக்கத்துருவுக்கு அடிமைவேலை செய்துவருவாளாயினாள்.

அப்போது கத்துரு நான் பாதலலோகம் போகவேண்டும், என்மக்களாகிய சர்ப்பர்களை உன்மகன் கருடன் சுமந்துவர நீ என்னைச்சுமந்து செல்வாயாக என்றுகூற, அப்படியே வினதையும் அவள் மகன் கருடனுஞ்சுமந்துசெல்லப் பாதலத்திற்சென்ற அளவிலே, சர்ப்பர்கள் கருடனைப்பார்த்து இங்குள்ள பலதீவுகளும் பார்க்கவேண்டும்; எங்கள் அடிமைக்காரி மகனாகிய நீ எங்களைச் சுமந்துசெல்லென்றார்கள். கருடன் அதுகேட்டு உடனே தாயைநோக்கி இவர்கள் உன்னை அடிமையென்றகாரணமென்னென்று கேட்க, வினதை முன்னிகழ்ந்ததைக்கூற, உடனே கருடன் சர்ப்பர்களைநோக்கி என்தாய் உங்களுக்கு அடிமையாயிருத்தலை நீக்கிக்கொள்ளு நிமித்தம் உங்களுக்கு ஏதுசெய்யவேண்டுமென்றான். சர்ப்பர்கள் தேவாமிர்தம் தருவாயானால் விலக்கிவிடுகிறோமென்று சொல்ல உடனே கருடன் மார்க்கத்திலேசில ஆச்சரியகாரியங்கள் செய்துகொண்டு சுவர்க்கத்தையடைந்துயுத்தத்திலே இந்திராதிதேவர் யாவரையும்வென்று, சர்ப்பகோடிகள் அக்கினி விட

